தமிழக அகழாய்வுகள்

# இராஜாக்கள்மங்கலம் (இரணியன் குடியிருப்பு)

## அகழாய்வு அறிக்கை

(2009–2010)


பதிப்பாசிரியர்

**சி.பி. சிங்,** இ.ஆ.ப.,

முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்

ஆசிரியர்கள்

**முனைவர் சீ.வசந்தி**

**முனைவர் தி. சுப்பிரமணியன்**

**கோ. அர்ச்சுணன்**



தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை சென்னை–600008

2011, திருவள்ளுவர் ஆண்டு – 2042

# நூல் விவரம்


| | | |
|---|---|---|
| முதற்பதிப்பு | : | 2011 |
| வெளியீடு எண் | : | 252 |
| நூலின் பெயர் | : | இராஜாக்கள்மங்கலம் (இரணியன் குடியிருப்பு) அகழாய்வு அறிக்கை |
| பொருள் | : | தொல்லியல் அகழாய்வு அறிக்கை |
| காப்புரிமை | : | தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை |
| பதிப்பாசிரியர் | : | திரு. சி. பி. சிங், இ.ஆ.ப., |
| ஆசிரியர்கள் | : | முனைவர் சீ. வசந்தி<br>முனைவர் தி. சுப்பிரமணியன்<br>கோ. அர்ச்சுணன் |
| மொழி | : | தமிழ் |
| எழுத்தின் அளவு | : | 12 புள்ளிகள் |
| தாள் அளவு | : | 80 ஜி.எஸ்.எம். மேப்லித்தோ |
| பிரதிகள் | : | 500 |
| விலை | : | ரூ. 55/– |
| அச்சகம் | : | சென்னை அச்சக தொழிற் கூட்டுறவு சங்கம் லிமிடெட்<br>6, பைக்கிராப்ட்ஸ் சாலை, திருவல்லிக்கேணி, சென்னை–600 005. |
| வெளியீட்டாளர் | : | தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை<br>தமிழ் வளர்ச்சி வளாகம்<br>ஆல்சு சாலை, எழும்பூர்<br>சென்னை – 600 008. |
| தொலைபேசி | : | 044–28190020, |
| நிகரி | : | 04428190023 |
| மின்னஞ்சல் | : | tnarch@tn.nic.in archcommissioner@gmail.com |
| வலைதளம் | : | www.tnarch |

# உள்ளடக்கம்


பதிப்புரை

1. இராஜாக்கள் மங்கலம் அமைவிடமும் அதனைச் சுற்றியுள்ள தொன்மை ஊர்களும் ... 1

2. புகழ்பெற்ற திருக்கோயில்கள் ... 13

3. இராஜாக்கள்மங்கலம் வரலாறு ... 17

4. முற்காலப் பாண்டியர் வரலாறு ... 19

5. இராஜாக்கள்மங்கல அகழாய்விடத்தில் கிடைத்த முற்காலப் பாண்டியர் சிற்பங்கள் ... 26

6. அகழாய்வுக்குழிகள் ... 37

முடிவுரை ... 39

பிற்சேர்க்கை

துணை நின்ற நூல்கள் 40

நிழற்படங்கள் ... 41


முன்அட்டை : அகழாய்வுக்குழி

பின் அட்டை : நரசிம்மர் சிற்பம் – திருமலை நாயக்கர் அரண்மனை

**சி. பி. சிங்,** இ.ஆ.ப.,
முதன்மைச் செயலாளர் (ம) ஆணையர்

தொல்லியல் துறை,
தமிழ் வளர்ச்சி வளாகம்,
ஆல்சு சாலை, எழும்பூர்,
சென்னை-600 008.
நாள் : 21.12.11

# பதிப்புரை

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை தமிழகத்தின் பண்பாட்டினை தரவுகளை வெளிக்கொணரும் பணியில் தொடர்ந்து முழுமையாக ஈடுபட்டு வருகின்றது. இப்பண்பாட்டுக் கூறுகளை அனைவரும் அறிந்துகொள்ளும் வகையில் கல்வெட்டுகள், அகழாய்வுகள் மூலம் வெளிப்படுத்தப்படும் தொல்பொருட்கள், கலை, கட்டடக்கலை மற்றும் செப்புத் திருமேனிகள் பற்றிய செய்திகள் அனைத்தையும் நூலாக வெளியிடும் பணியினை மேற்கொண்டு வருகிறது. அவ்வகையில் தமிழக அகழாய்வுகள் வரிசையில் இராஜாக்கள்மங்கலம் (இரணியன் குடியிருப்பு) என்னும் இடத்தில் நடத்தப்பட்ட அகழாய்வு குறித்த இந்நூல் தமிழக அரசின் பகுதி II திட்டத்தின் கீழ் நூலாக வெளியிடப்படுகிறது. இராஜாக்கள்மங்கலம் அமைந்துள்ள திருநெல்வெலி மாவட்டம் குறித்தும், இங்கு கிடைத்த கற்சிலைகள் குறித்தும் விரிவாக விளக்கப்பட்டிருப்பது மேலும் இந்நூலுக்கு சிறப்பு சேர்ப்பவைகளாகும்.

இந்நூலாசிரியர்களான முனைவர் சீ. வசந்தி அவர்களுக்கும், முனைவர் தி. சுப்பிரமணியன், கோ. அர்ச்சுணன் ஆகியோருக்கும் எனது பாராட்டுகள். இந்நூலினை சிறந்த முறையில் ஒளி அச்சு, முகப்பு அட்டை வடிவமைத்த அச்சுக்கோர்ப்பாளர் திருமதி. ச. சரஸ்வதி அவர்களுக்கும் இந்நூலாக்கத்திற்கு பெரிதும் துணைபுரிந்த இத்துறையின் முனைவர் பட்ட ஆய்வு மாணவி செல்வி கோ. சசிகலாவிற்கும் எனது பாராட்டுகள்.

இந்நூலை வெளியிட நிதியுதவி அளித்திட்ட தமிழ்நாடு அரசுக்கு எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் ஆய்வாளர்கள், பள்ளி, கல்லூரி மாணவர்கள் மற்றும் மக்கள் அனைவருக்கும் மிக்க பயனுடையதாய் விளங்கும் என்பதில் ஐயமில்லை.

21/12/11

# 1. இராஜாக்கள்மங்கலம் அமைவிடமும் அதனைச் சுற்றியுள்ள தொன்மை ஊர்களும் திருக்கோயில்களும்

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை திருநெல்வேலி மாவட்டம், நாங்குநேரி வட்டம், இரணியன் குடியிருப்புப் பகுதி என்று அழைக்கப்படும் இராஜாக்கள்மங்கலம் என்னுமிடத்தில் 2009–10–இல் அகழாய்வு மேற்கொண்டது.

## அமைவிடம்

திருநெல்வேலி மாவட்டத்தில் வள்ளியூர் மார்க்கத்திலிருந்து சுமார் 12 கி.மீ. தொலைவில் நான்குநேரி மற்றும் ஆனைக்குளம் ஊராட்சி ஒன்றியத்திற்கு உட்பட்ட இரணியன் குடியிருப்பு மற்றும் மயிலாபுதூர் என்ற ஊர் உள்ளது. இரணியன் குடியிருப்பின் கிழக்குப்பக்கம் துலுக்கர்பட்டி என்ற ஊரும், மேற்கே இராஜாக்கள்மங்கலம் என்ற இடமும், வடக்கே மேற்குத் தொடர்ச்சி மலையில் பிறக்கும் பச்சை மலை ஆற்றின் கிளையாறு ஆன நம்பியாறும் எல்லைகளாக உள்ளன. தெற்கே மைலாபுதூர் என்ற ஊர் அமைந்துள்ளது.

## ஊர் வரலாறு

### திருநெல்வேலி மாவட்டம்

நெல்லை மாவட்டம் தமிழகத்தின் தென்பகுதியில் அமைந்துள்ள மாவட்டம் ஆகும். திருநெல்வேலி முற்காலப் பாண்டியர் காலத்தில் பாண்டிய நாடு, வேம்பநாடு எனவும், சோழர் ஆட்சியில் இராஜராஜ வளநாடு, இராஜராஜ பாண்டி நாடு எனவும் வழங்கப் பெற்றது. பொருநை பாய்கின்ற வளமிக்கப் பகுதியாகவும், பாண்டியர்களின் தலைநகரமாகவும் இவ்வூர் விளங்கியது. திருநெல்வேலிக்கு சாலியூர் என்ற பெயரும் இருந்தது என காந்திமதி பிள்ளைத் தமிழும், தலபுராணமும் கூறுகின்றன.

மதுரைக்காஞ்சி,

*"சீர் சான்ற நெல்லின்*
*ஊர் கொண்ட உயர்கொற்றவ''* (87–88)

என்று தலையாலங்கானத்து நெடுஞ்செழியனை புகழ்ந்துரைக்கின்றது.

கி.பி. ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த பாண்டிய மன்னன் மாறவர்மன் அரிகேசரி

*"நிறை கொண்ட சிந்தையான் நெல்வேலி*
*வென்ற சீர் நெடுமாறன்"*

*"நெல்வேலியில் வென்ற மாறன்"*

என்றும் புகழ்ந்துரைக்கப்படுகின்றான்.

சைவ சமயக்குரவரான திருஞானசம்பந்தர்,

*"பொருந்து தண்புறவினிற் கொன்றை பொன் சொரிதரத் துன்று*
*பைம்பூந் செருத்தி செம்பொன் மலர் திருநெல்வேலியுறை செல்வர் தாமே"*

என இத்தலத்தைப் பாடுகின்றார்.

நெல்லுக்கு வேலியிட்டு இறைவன் காத்ததால் 'நெல்வேலி' என்றும், 'திரு' என்ற அடைமொழியுடன் திருநெல்வேலி என்று இத்தலம் அழைக்கப்படுகிறது.

சங்ககாலம் முதல் வரலாற்றில் நெல்லையைப் பற்றிய குறிப்புகள் காணக்கிடைக்கின்றன. மாங்குடி மருதனார், மாறோக்கத்து நப்பசலையார் போன்ற சங்ககாலப் புலவர்களின் வாழ்விடமாக இவ்வூர் இருந்துள்ளது. நம்மாழ்வார், பெரியாழ்வார் போன்ற வைணவப் பெரியார்களும், பரிமேலழகர், சேனாவரையர் போன்ற உரையாசிரியர்களும் இங்கு வாழ்ந்துள்ளனர். குமரகுருபரர், திரிகூடராசப்பக் கவிராயர், கவிராஜ பண்டிதர், வ.உ.சி., பாரதியார், புதுமைப்பித்தன் போன்ற இலக்கியத் தமிழ்ப் பற்றாளர்களும் வாழ்ந்த பகுதி திருநெல்வேலியாகும்.

எச். ஏ. கிருட்டிணப்பிள்ளை, இரா.பி. சேதுப்பிள்ளை, கா.சு. பிள்ளை, இரசிகமணி டி.கே.சி., சோமசுந்தரபாரதியார், வெள்ளக்கால் சுப்ரமணிய முதலியார் போன்ற எழுத்தாளர்களும், ஜி.யு.போப், கால்டுவெல், வீரமாமுனிவர் போன்ற மேல்நாட்டு அறிஞர்களும் இம்மண்ணிலே வாழ்ந்து பெருமை சேர்த்தனர் என்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

## நெல்லையின் ஆறுகள்

இயற்கையின் அரணாக விளங்குகின்ற மேற்குத் தொடர்ச்சி மலைத்தொடரின் தென்பகுதியில் உள்ள பொதிகை மலையில் தண்பொருநை ஆறு உற்பத்தியாகிறது. தாமிரபரணி என்றழைக்கப்படும் இப்பொருநையாற்றுடன் 1. தாமிரபரணி 2. தாமிரபரணி (நெய்யாற்றங்கரை) 3. பேயனாறு 4. சின்னப்பேயனாறு 5. பெரியப் பேயனாறு 6. நாகமலையாறு 7. காட்டாறு 8. சோம்பனாறு 9. கௌதலையாறு 10. உள்ளாறு

11. பாம்பனாறு 12. காரையாறு 13. நம்பியாறு 14. கோதையாறு 15. பச்சையாறு 16. கடனாநதி 17. மணி முத்தாறு 18. பச்சையாறு 19. கோம்பையாறு ஆகிய 19 துணையாறுகள் இணைகின்றன.

## தாமிரபருணி

நெல்லையில் ஓடும் மேற்கண்ட பல ஆறுகள் இணைந்து பேராறாகி 120 கி.மீ. தூரம் ஓடி புன்னக்காயல் என்னும் பட்டினத்தில் மன்னார் வளைகுடா கடலில் மூன்று பகுதிகளாகக் கலக்கிறது. இந்த வளமிக்க ஆற்றுக்கு பொருநையாறு, தாமிரபருணி, தாம்பிரபரணி, பொருநல், தாமிரபரணி, தண்பொருநை, தாம்பன்னி, தாம்ரா, செம்பு அல்லது பர்னா இலை என்ற பல்வேறு பெயர்கள் உண்டு.

பொருநை ஆற்றைப் பற்றி காளிதாசர் தனது இரகுவம்சத்தில் குறிப்பிட்டுள்ளார். பண்டைய கிரேக்கர்கள் இந்நதியை ‘சோலன்’ என அழைத்தனர். இவ்வாற்றின் கரைகளில் பழமையான நாணயங்கள் கிடைத்துள்ளன. மேலும் ஆதிச்சநல்லூர் என்ற தொல்லியல் சிறப்புமிக்க பகுதியும் இவ்வாற்றங்கரையிலேயே அமைந்துள்ளது.

## நம்பியாறு

நம்பியாறு மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகி, களக்காடு வனப்பகுதி வழியாகப் பாய்ந்து பின்னர் நாங்குநேரி, ராதாபுரம் வழியாகச் சென்று மன்னார் வளைகுடா கடலில் கலக்கிறது. வடகிழக்கு மற்றும் தென்மேற்குப் பருவகாலங்களில் இவ்வாறு ஆண்டிற்கு 302 மி.க அடி தண்ணீர் பெறுகிறது.

## நம்பியாற்றின் அணைகள்

நம்பியாற்றின் குறுக்கே 9 அணைக்கட்டுகள் கட்டப்பட்டுள்ளன. அவை 1. கல்லணை 2. தளவாய்புதூர் அணைக்கட்டு 3. இராஜாக்கள்மங்கலம் அணைக்கட்டு 4. மைலாபுதூர் அணைக்கட்டு 5. கன்னநல்லூர் அணைக்கட்டு 6. விஜயன் அணைக்கட்டு 7. கோவன் அணைக்கட்டு 8. தட்டிகுளம் அணைக்கட்டு 9. புளிமால் குளம் அணைக்கட்டு ஆகியவைகளாகும்.

## நெல்லையின் இயற்கையரண்கள்

தென்னிந்தியாவின் இயற்கை அரணாக விளங்குகின்ற மேற்குமலைத்தொடரின் தென்பகுதியில் உள்ள பொதிகை மலையானது திருநெல்வேலி தெற்கு, மேற்குப் பகுதிகளின் எல்லையாக விளங்குகின்றது. இம்மலைப்பகுதி அடர்ந்த காடுகள் சார்ந்த பகுதியாகும். பொதியமலை பற்றியக் குறிப்புகள் சங்கஇலக்கியத்தில் மிகுதியாக உண்டு. இளங்கோவடிகள் தம் சிலப்பதிகாரத்தில் பொதிகை மலை, இமயமலை, புகார் நகரம் இவற்றின் சிறப்பினைப் போற்றுகின்றார்.

*'பொதியில் ஆயினும் இமயம் ஆயினும்*
*பதியெழு அறியாப் பழங்குடி கெழீஇய*
*பொதுஅறு சிறப்பிற் புகாரே ஆயினும்*
*நடுக்கின்றி நிலைஇயது என்பது அல்லதை*
*ஒடுக்கம் கூறா உயர்ந்தோர் உண்மையின்'*

*(சிலம்பு. 1–14–18)*

பொதியமலை அரணாகவும், மருத்துவச் செழிப்புடைய மலையாகவும் விளங்குகின்றது. பொதியமலையில் அகத்தியர் தமிழை வளர்த்தார் என்று பல புராணங்களும் இம்மலையோடு தமிழைத் தொடர்புபடுத்தி வழங்கப்பெறுகின்றன. இத்தகைய புவியமைப்புள்ள பகுதியில் வரலாற்று சிறப்புமிக்க இராஜாக்கள்மங்கலம் அமைந்துள்ளது.

## சுற்றியுள்ள தொன்மை ஊர்களும் திருக்கோயில்களும்

திருநெல்வேலி மாவட்டம் தொல்பழங்காலம் முதல் பல தொல்லியல், வரலாற்றுத் தடயங்களைத் தன்னகத்தேக் கொண்டு விளங்குகின்றது. இங்குள்ள ஊர்கள் பலவும் பழமையும் பெருமையும் வாய்ந்தவை. இவற்றுள் திருநெல்வேலி, சேரன்மாதேவி, திருவாலீசுவரம், அத்தாளநல்லூர், மன்னார்கோவில், பிரம்மதேசம், சங்கரன்கோவில், சேந்தமங்கலம், மாங்குடி, கரிவலம்வந்த நல்லூர், குற்றாலம், ஆய்க்குடி, தென்காசி, விஜயநாராயணம், திருக்குறுங்குடி, களக்காடு, ஏர்வாடி, நாங்குநேரி, சீவலப்பேரி, மணப்படை வீடு, பாளையங்கோட்டை, இராதாபுரம் முதலியன குறிப்பிடத்தக்கவையாகும்.

## திருநெல்வேலி

நீர்வளத்தாலும், நிலத்தின் செழுமையாலும் திருநெல்வேலி மேம்பட்டு விளங்கியதால் பாண்டிய மன்னருள் பலர் இப்பகுதியினை தலைநகரமாகக் கொண்டுள்ளனர். ஊரின் தென்பகுதியில் பொருநையாறு பாய்ந்து வளம் கொழிக்கிறது.

மாறவர்மன் அரிகேசரி நெல்வேலியை வென்றவன் எனக் குறிப்பிடப்படுகின்றான். திருநெல்வேலிக்கு அருகாமையில் உள்ள பேட்டையின் ஒரு பகுதி திருமங்கை எனப்படுகின்றது. நின்றசீர் நெடுமாறனாகிய மாறவர்மன் அரிகேசரியின் மனைவி மங்கையர்க்கரசி வந்து தங்கியிருந்த இடம் திருமங்கை என அழைக்கப்படுகிறது.

வரலாற்றுச் சான்றுகளைக் கொண்டு காண்கையில், கி.பி. 7–ஆம் நூற்றாண்டிற்கு முன்பே நெல்லையப்பர் கோயில் இருந்துள்ளது. இக்கோயிலை தேவாரமுதலிகளுள் ஒருவரான சம்பந்தர் பாடியுள்ளார். இவ்வூர் தேவதானமாகவும், பிரம்மதேயமாகவும்

இருந்துள்ளது. கோயில் கல்வெட்டுகளில் இவ்வூர் கீழ்வெம்பநாட்டுத் தேவதானம் திருநெல்வேலிக் கோயில் என்றும், பிரமதேயம் திருநெல்வேலியான குலசேகரச் சதுர்வேதி மங்கலம் என்றும் குறிப்பிடப்படுகின்றது.

### கங்கைகொண்டான்

திருநெல்வேலி மதுரை செல்லும் வழியில் இவ்வூர் அமைந்துள்ளது. இங்குள்ள பழமையான கைலாசநாதர் கோயிலில் 12 கல்வெட்டுகள் உள்ளன. ஸ்ரீவல்லபன், இராஜராஜன், இராஜேந்திரன், சுந்தரச்சோழன், குலோத்துங்கன், இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆகியோரது கல்வெட்டுகள் இங்குள்ளன. கி.பி. 8–ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.13–ஆம் நூற்றாண்டு வரை பாண்டியர் மற்றும் சோழ மன்னர்களின் ஆட்சியின் கீழ் இவ்வூர் இருந்துள்ளது.

கல்வெட்டில் 'ஸ்ரீ வல்லப மங்கலம்' என கங்கைகொண்டான் குறிப்பிடப்பட்டுள்ளது. 'ராஜராஜ மண்டலத்து கீழ்க்களக் கூற்றத்து ஸ்ரீவல்லப மங்கலம்' என உள்ளது. ஆனால் முதல் குலோத்துங்கச் சோழன் ஆட்சிக் காலத்தில் 'ராஜராஜ பாண்டிநாட்டு முடிகொண்ட சோழ வளநாட்டு கீழ்க்களக்கூற்றம் பிரம்மதேயம் கங்கை கொண்ட சோழச் சதுர்வேதி மங்கலம்' என கல்வெட்டு கூறுகின்றது. எனவே முதலாம் இராஜேந்திர சோழன் கங்கை வரை படையெடுத்துச் சென்று வென்று, கங்கை நதி நீரைக் கொண்டு வந்ததால் கங்கைகொண்டான் என்ற அவனது சிறப்புப் பெயரில் இவ்வூர் அமைந்திருக்கிறது எனலாம். இவ்வூரின் அருகில் செழியனூர் என்ற வரலாற்றுச் சிறப்புடைய ஊர் உள்ளது. இங்குள்ள சுந்தரபாண்டியன் காலத்துக் கல்வெட்டில், 'செழியனூரான இரணதுங்கராமநல்லூர்' என ஊரின் பெயர் உள்ளது.

### மானூர்

நெல்லையிலிருந்து 9 கல் தொலைவில் மானூர் உள்ளது. இங்குள்ள அம்பலவாணர் கோயில் நெல்லையப்பர் கோயிலுடன் தொடர்புடையது. நெல்லையப்பர் ஆறாவது திருநடனம் புரிந்த இடம் இதுவே ஆகும். இக்கோயிலிலுள்ள மாறஞ்சடையன் காலத்து கல்வெட்டொன்று, 'களக்குடி நாட்டுப் பிரம்மதேயமான மானநிலை நல்லூர்' என இவ்வூரைக் குறிப்பிடுகின்றது.

### அம்பாசமுத்திரம்

தாமிரபரணியின் வடகரையிலுள்ள இவ்வூரில் உள்ள பழமையான கோயில் எரிச்சாவுடையார் கோயில் ஆகும். இங்குள்ள வட்டெழுத்துக் கல்வெட்டொன்று,

'முள்ளிநாட்டு இளங்கொய்க்குடி படாரர்க்கு முதல் கெடாமல் பொலி கொண்டு நான்கு கலமும் திருவமுது செலுத்துவதாக வரகுண மகாராஜா் வீற்றிருந்தணது இளங்கோக்குடி சபையார் கையில் கொடுத்த காசு....' என இவ்வூரின் பெயரை இளங்கோக்குடி என்று குறிப்பிடப்படுகின்றது.

மேலும், இங்குள்ள காசிநாதர் கோயில் கருவறை விமானம் வடசுவரில் உள்ள ஒரு கல்வெட்டு, '.....செய்துங்க நாட்டு சங்கர நாராயண வீர உதய மார்த்தாண்ட வன்மர் சிறைவாய நாம் விடக்குடுத்த முள்ளி நாட்டு பிரம்மதேயம் ஸ்ரீராசராச சதுர்வேதி மங்கலத்து நடுவிற்கரை வேளாக்குறிச்சியில் காசிபி தீர்த்தக்கரையில் திருப்போற்றி கருமுடைய நயினார் கோயிலும்....இளங்கோக்குடி....' எனக்கூறுகின்றது. எனவே அம்பாசமுத்திரத்திற்கு இளங்கோக்குடி, வேளாக்குறிச்சி என்ற பெயர்கள் வழங்கி வந்தமையையும், நாயக்கர் ஆட்சிக்காலத்தில்தான் அம்பாசமுத்திரம் என்ற பெயர் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதையும் அறியமுடிகிறது.

## அரிகேசரிநல்லூர்

அம்பாசமுத்திர வட்டத்தில் உள்ள இவ்வூர் மாறவர்மன் அரிகேசரியின் பெயரால் வழங்கப்பட்ட தேவதானப் பகுதியாகும். ஊரின் கீழ்ப்பகுதியில் அரிகேசரி ஈசுவரநாதர் கோயிலும், ஊரின் நடுவே ஸ்ரீநவநீதகிருஷ்ண சுவாமி கோயிலும் உள்ளன. அரிகேசரி ஈசுவரநாதர் கோயிலிலுள்ள கல்வெட்டுகளில், 'முள்ளிநாட்டு அரிகேசரிநல்லூரில் உள்ள அரிகேசரி ஈசுவரமுடைய நாயனார்' என உள்ளது. அரிகேசரியின் மகன் கோச்சடையன் இரணதீரன் இவ்வூருக்கு அருகிலுள்ள திருப்புடைமருதூரில் போர் செய்துள்ளமையும் அறியப்படுகிறது.

## திருப்புடைமருதூர்

அம்பாசமுத்திரம் வட்டத்தில் கிழக்கில் 25 கி.மீ. தொலைவிலுள்ள திருப்புடைமருதூர், கோச்சடையன் இரணதீரன் மருதூர் செங்கோட்டையில் நிகழ்த்திய போர்க் குறித்துக் கூறும். 'பொருது ஊரும் கடல் தானையை மருதூரில் மாண்பு அழித்து' என்பதாக இவ்வூரைப்பற்றி வேள்விக்குடிச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன. இங்குள்ள தாமிரபரணி ஆற்றங்கரையில் நாறும்பூநாதசுவாமி கோயிலில் உள்ள முற்காலப் பாண்டியர் கல்வெட்டொன்று, 'கோச்சடைய மாறர்க்கு ஆண்டு 2 இதனெதிர்படுனொடு இவ்வாண்டு முள்ளிநாட்டு திருப்பாடு மருதில் சண்டீசுவரர்க்கு....' என்று திருப்பாடு மருதில் என்று இவ்வூரினைக் குறிப்பிடுகின்றது. இக்கோயிலில் உள்ள ஓவியங்கள் வரலாற்றுச் சிறப்பு மிக்கவைகளாகும். இவை இன்றும் பண்டைய ஓவியக் கலைக்குக் கட்டியம் கூறி நிற்கின்றன.

### கோயில்குளம்

அம்பாசமுத்திரத்தின் கிழக்கில் உள்ள கோயில் குளம் ஊரின் வடமேற்குத் திசையில் தென்னழகர் கோயில் உள்ளது. இக்கோயிலில் உள்ள சடையன் மாறனின் வட்டெழுத்துக் கல்வெட்டு,'முள்ளிநாட்டுக் குளத்து....தார்விடங்க நல்லூர்த் திருப்பொதியில் விண்ணார். . . .க்கு அடிகள்' என்று கூறுவதை நோக்குங்கால் இக்கோயில் முற்காலப் பாண்டியர் காலத்தில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்பதை அறியமுடிகிறது. மேலும் 'குளம்' என்ற இவ்வூரின் பெயரும் அக்காலத்திலிருந்தே வழக்கில் இருந்துள்ளதை அறிய முடிகிறது.

### சேரமாதேவி

முற்காலப் பாண்டிய மன்னர்களுள் ஒருவனாகிய வரகுணவர்மனின் தம்பியாகிய பராந்தகபாண்டியன் வானவன் மாதேவி என்ற சேரகுல மங்கையை திருமணஞ் செய்து கொண்டான். அத்தேவியின் பெயரால் அமைக்கப்பட்டதே இவ்வூர். இவ்வூரில் வைத்தியநாதர் கோயில், இராமசாமி கோயில், ஆவுடையம்மன் கோயில், நவநீதகிருஷ்ணன் கோயில், அழகியப்பர் கோயில் முதலிய கோயில்கள் அமைந்துள்ளன. இராமசாமி கோயிலில் உள்ள கி.பி.10–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த முதலாம் இராஜராஜ சோழன் கல்வெட்டொன்று, 'சேரன்மாதேவிச் சதுர்வேதிமங்கலத்து நிகரிலிச் சோழ விண்ணகர் ஆழ்வார்' என இவ்வூர் சதுர்வேதிமங்கலமாக கொடையளிக்கப் பட்டதைக் குறிப்பிடுகிறது.

### திருவாலீசுவரம்

மன்னார்கோயிலுக்கருகில் கருணையாற்றின் கரையில் இவ்வூர் அமைந்துள்ளது. இங்குள்ள திருவாலிநாதசுவாமி கோயில் முற்காலப் பாண்டியர் கோயில் கட்டடக் கலைக்கு சிறந்த எடுத்துக்காட்டாகும். இக்கோயிலிலுள்ள முதலாம் இராஜராஜசோழனின் 9–ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டு இவ்வூரை, 'முள்ளிநாட்டு ராஜராஜ வளநாட்டு பிரம்மதேயம் ராஜராஜ சதுர்வேதிமங்கலம்' எனக் குறிப்பிடுகின்றது.

### அத்தாளநல்லூர்

அம்பாசமுத்திர வட்டத்தில் உள்ள இவ்வூரை 'ராஜராஜ நாராயண நல்லூர்' என இராஜராஜனின் கல்வெட்டுச் செய்தி கூறுகின்றது. முதலாம் குலோத்துங்க சோழன் காலத்துக் கல்வெட்டில், 'முள்ளிநாட்டு பிரம்மதேயமான ராஜராஜ சதுர்வேதி மங்கலத்தின் கிழக்குப் பிடாகையான அத்தாணி நல்லூர்' என்று கூறப்பட்டுள்ளது. அத்தாணி என்பது அரசன் தங்கியிருக்கும் மண்டபம் என்று பொருள். அதுவே பின்னாளில் அத்தாள நல்லூர் என வழங்கப்பட்டதாகத் தெரிகிறது. இவ்வூரிலுள்ள ஸ்ரீஆதிமூலப் பெருமாள் கோயில், மூன்றிச்சுவரமுடையார் கோயில் முதலியன குறிப்பிடத்தக்க திருக்கோயில்களாகும்.

### மன்னார்கோயில்

வேதபுரி, வேதநாராயணபுரம் என்று தலபுராணங்கள் மன்னார் கோயிலைச் சுட்டுகின்றன. இங்குள்ள புகழ்பெற்ற சோழர்காலக் கற்றளியான இராஜகோபாலசுவாமி கோயிலில் உள்ள கல்வெட்டுகள் இக்கோயிலை, 'இராசேந்திர சோழ விண்ணகரம்' என்று குறிப்பிடுகிறது. சோழர் ஆட்சிக் காலத்தில் பிரம்மதேசம், மன்னார்கோயில், திருவாலீசுவரம் ஆகிய பகுதிகள் இராஜராஜ சதுர்வேதி மங்கலத்தில் அடங்கியிருந்தன எனத் தெரிகிறது.

### பிரம்மதேசம்

மன்னார்கோயிலுக்கு அருகிலுள்ள பிரம்மதேசம் என்ற ஊர் சோழர் ஆட்சிக்காலத்தில் வழங்கப்பட்ட பிரம்மதேயமாகும். இது இராஜராஜ சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப்பட்டதாக இங்குள்ள கைலாசநாதர் கோயில் கல்வெட்டுகளினால் அறிய முடிகிறது. வீர உதயமார்த்தாண்டவர்மன் என்னும் சேரமன்னன் வேப்பங்குளம் வீரஉதயமார்த்தாண்ட பேரேரி என்ற ஊரை கைலாசநாதர் கோயிலின் வழிபாட்டிற்கு கொடையாக அளித்துள்ளார் என்ற செய்தியும் இங்குள்ள கல்வெட்டினால் அறியமுடிகின்றது.

### சங்கரன்கோவில்

திருநெல்வேலிக்கு வடமேற்குத் திசையில் சங்கரன்கோவில் அமைந்துள்ளது. இவ்வூரில் உள்ள சங்கரநாராயணன், கோமதி அம்மன் கோயில் முற்காலப் பாண்டியரின் புகழ்பெற்ற கோயிலாகும். கோமதி அம்மன் கோவிலின் 'ஆடித் தபசு' சிறப்பு வாய்ந்தது. சங்கரநாராயணராக விளங்கும் சிவபெருமான் சைவ, வைணவ சமயங்களின் ஒருங்கிணைப்பைக் காட்டி நிற்கிறார். இக்கோயில் பாண்டியன் உக்கிரப்பெருவழுதியால் கட்டப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகின்றது.

### சேந்தமங்கலம்

முற்காலப் பாண்டியருள் ஒருவனான சேந்தன் செழியன் பெயரால் இவ்வூர் விளங்குகின்றது. திருநெல்வேலி, சங்கரன்கோயில் என இரு வட்டங்களிலும் சேந்தமங்கலம் என்ற பெயருடைய ஊர்கள் அமைந்துள்ளன. சேந்தமங்கலம் என்ற பெயருடைய ஊர்கள் சேலம், விழுப்புரம் மாவட்டங்களிலும் காணப்படுகின்றன.

### வீரசிகாமணி

சங்கரன்கோயில் வட்டத்தில் உள்ள இவ்வூரின் மேற்குப்புறத்தின் பாறையில் குடைவரைக் கோயில் ஒன்று உள்ளது. மேலும் சமணப் படுக்கைகள் இக்குகைத்தளத்தில் காணப்படுகின்றன. பாறையின் கீழ்ப்பகுதியில் கைலாசநாதர் கோயில் உள்ளது. இங்கு வட்டெழுத்துக் கல்வெட்டு காணப்படுகிறது.

### மாங்குடி

சங்க இலக்கியப் புலவருள் ஒருவரான மாங்குடி மருதனார் இவ்வூரின் பெயரால் அறியப்படுகின்றார். இவ்வூரில் நடைபெற்ற அகழாய்வில் கிடைத்த பானையோட்டில் உள்ள தமிழ்ப்பிராமி எழுத்துப் பொறிப்பு, 'குறுமங்களத்தான் யி யானை பொ' என்று வாசிக்கப்பட்டுள்ளது. மேலும் இங்குள்ள ஈமச்சின்னங்களில் மணிகள், இரும்பு ஆயுதங்கள் முதலியன கிடைத்துள்ளன. நுண்கருவிகளும் இங்கு சேகரிக்கப்பட்டன. ஆனால் நுண்கற்காலத்திற்கும், இரும்பு காலத்திற்கும் இடைப்பட்ட காலத்திய மண்ணடுக்கில் மனிதன் வாழ்ந்ததற்கானத் தடயங்கள் ஏதும் கிடைக்கவில்லை.

### கரிவலம் வந்த நல்லூர்

வைப்பாற்றின் தென்கரையில் உள்ள இவ்வூர் 'பிடியும் பிடாகையும் நடந்து' என்ற கல்வெட்டுகளின் செய்திக்கேற்ப யானையைக் கொண்டு நில எல்லையை அளந்து கொடையாக நல்கிய பிரமதேய ஊராய் இருக்கலாம். நல்லூர் என்பது சதுர்வேதி மங்கலத்து ஊரைக் குறிக்கும். தென்காசிப் பாண்டிய மன்னன் அதிவீரராமனால் இங்குள்ள பால்வண்ணநாதர் கோயில் தலத்தினைப் பற்றி பாடப்பட்டதே 'திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி' என்ற அந்தாதி நூலாகும்.

### குற்றாலம்

தென்காசியின் தென்மேற்கில் அதாவது மேற்குத் தொடர்ச்சி மலையின் தென்மேற்கில் இவ்வூர் விளங்குகிறது. அருவிகள் சூழ்ந்த குற்றாலம் இயற்கை வளம் நிறைந்தது. சிற்றாறு குற்றால மலையில் தோன்றுகிறது. சித்சபை எனப்படும் பஞ்ச சபைகளுள் ஒன்றான குற்றாலம் குறும்பலாநாதர் கோயில் திருஞானசம்பந்தரால் பாடல் பெற்ற தலமாகும். இக்கோயிலில் நெடுஞ்சடையன் பராந்தகன் காலத்திய வட்டெழுத்துக் கல்வெட்டொன்று 25 ஆடுகளை திருக்குற்றாலத்துத் தேவருக்கு நந்தா விளக்கெரிக்க கொடுத்த செய்தியைக் கூறுகின்றது. மேலும் இம்மன்னனின் மற்றொரு கல்வெட்டு, 'தென் வட நாட்டைச் சார்ந்த திருக்குற்றாலம் எனக் குறிக்கின்றது.

### ஆய்க்குடி

*"தென்திசை ஆ ஆய்க்குடி இன்றாயின்*
*பிறழ்வது மன்னோ இம்மலர் தலை உலகே"*

என்ற புறநானூற்றுப் பாடல் குறிப்பிடும் ஆய்க்குடி இதுவே. இவ்வூர் கடையெழு வள்ளல்களுள் ஒருவனாகிய ஆய்அண்டிரன் ஆண்ட நிலப்பகுதியாகும். இவ்வூரின் தென்புறமுள்ள மகாலிங்க மலையில் சமணப்படுக்கைகள் காணப்படுகின்றன. இவ்வூர் தொல்காலம் முதல் வரலாற்றுச் சிறப்புமிக்க ஊராகத் திகழ்ந்துள்ளது.

## தென்காசி

கங்கைக்கரையில் உள்ள காசிக்கு இணையாக தென்புலத்தில் சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் இவ்வூரினை ஏற்படுத்தி, ஊரின் நடுவே காசி விசுவநாதர் கோயிலைக் கட்டினான். இவ்வூரின் வழியே சிற்றாறு செல்கிறது. குலசேகரநாதர் கோயில், விண்ணகரப் பெருமாள் கோயில் முதலியன இங்குள்ள பிற குறிப்பிடத்தக்க கோயில்களாகும். கி.பி.1462–ஆம் ஆண்டு பராக்கிரம பாண்டியனின் கல்வெட்டொன்று, 'தட்சிணகாசியாக திருப்படை வீடு உண்டாக்கி' என்று கூறுகிறது.

## விஜயநாராயணம்

நாங்குநேரிக்கு கிழக்கில் 16 கி.மீ. தொலைவில் இவ்வூர் உள்ளது. முற்காலப் பாண்டியர் காலத்தில் விஜயநாராயணச் சதுர்வேதி மங்கலம என இவ்வூர் குறிக்கப் பெற்றதாக இங்குள்ள மனோன்மணீஸ்வரர் கோயில் கல்வெட்டு கூறுகின்றது. மேலும், இங்குள்ள பெருமாள் கோயில் இறைவன் 'வரகுண விண்ணகர ஆழ்வார்' என்று அக்கோயில் கல்வெட்டுகளில் குறிப்பிடப்படுகின்றார். எனவே முற்காலப் பாண்டியருள் ஒருவனாகிய வரகுணன் காலத்தில் இக்கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும் எனத் தெரிகின்றது. பின்பு சோழர் ஆட்சிக் காலத்தில் ஜெயங்கொண்ட சோழச் சதுர்வேதி மங்கலம் என்று குறிப்பிடப்படுகிறது.

## திருக்குறுங்குடி

நம்பியாற்றின் கரையில் மகேந்திரமலை அடிவாரத்தில் இவ்வூர் உள்ளது. நாங்குநேரிக்கு மேற்கில் நெல்லையிலிருந்து 43 கி.மீ. தொலைவில் உள்ள திருக்குறுங்குடி நம்மாழ்வார், பெரியாழ்வாரால் பாடல் பெற்ற தலமாகும். கி.பி. 8–ஆம் நூற்றாண்டிலேயே இக்கோயில் முற்காலப் பாண்டியர்களால் கட்டப்பட்டது எனத் தெரிகிறது. திருவாய் திருமொழி இத்தலத்தை,

*'சோலை சூழ் தண் திருக்குறுங்குடி'* – *5.5.6*
*'குன்றின் முல்லை மன்றிடை நாறும் குறுங்குடி'* – *9.6.3*

என்று சிறப்பித்துப் பாடுகிறது.

## களக்காடு

நாங்குநேரியிலிருந்து 8 கி.மீ. தொலைவில் களக்காடு அமைந்துள்ளது. பச்சையாறு, களக்காட்டு மலையில் தோன்றுகிறது. வரதராசப்பெருமாள் கோயிலும், சத்தியவாகீசர் கோயிலும் இங்குள்ளன. இங்குள்ள கல்வெட்டில், 'வானவன் நாட்டுப் பச்சாற்றுப் போக்கில் சோழகுலவல்லிபுரமான களக்காடு' என இவ்வூரின் பெயர் சுட்டப்பெறுகின்றது.

### ஏர்வாடி

திருக்குறுங்குடிக்குக் கீழ்புறம் ஏர்வாடி உள்ளது. இங்குள்ள திருவழுதீஸ்வரர் கோயிலை திருவழுதி என்ற குருகூர்ப் பாண்டியன் என்பவன் கட்டியுள்ளான்.

### நாங்குநேரி

கி.பி.1819–க்கு பின் இவ்வூர் நாங்குநேரி வட்டத் தலைநகராயிற்று. கல்வெட்டில் இவ்வூர் வளநாட்டு சிவமங்கைச் சதுர்வேதிமங்கலத்து சிவரமங்கை எனக் குறிப்பிடப்படுகின்றது. பிற்காலக் கல்வெட்டுகளில் வானமாமலைப் பந்தல், இராமானுஜ பீடம் ஆகியவை குறிக்கப்பெறுகின்றன. இங்குள்ள வானமாமலைப் பெருமாள் ஆலயம், வானமாமலை ஜீயர் சுவாமிகள் திருமடத்தின் மேற்பார்வையிலுள்ளது. செப்புப்பட்டயம் ஒன்றில் காணப்படும் செய்தியின்படி இத்திருமடம், கொல்லம் 622–இல் (கி.பி.1446) தோன்றியது எனத் தெரிகிறது. நாங்குநேரி வட்டத்திற்குத் தலைமையிடமாக 1819–ஆம் ஆண்டு வரை களக்காடு இருந்துள்ளது. 1839–இல் இவ்வட்டம் வள்ளியூர் வட்டமாகப் பிரிந்தது. மீண்டும் 1860–இல் இவ்விரு வட்டங்களும் ஒன்றாகிவிட்டன.

நாங்குநேரியில் உள்ள நாகநாதர் கோயில் கல்வெட்டில், நாகனேரி என ஊரின் பெயர் உள்ளது. மற்றோரிடத்தில் ‘பச்சாற்றுப் போக்குவானநாடு சீவரமங்கை சதுர்வேதி மங்கலம்’ என ஊரின் பெயர் உள்ளது. வானமாமலை பெருமாள் கோயில் நாச்சியாரின் திருப்பெயர் சீவரமங்கை என்பதாகும். நாங்குநேரியில் வானமாமலைப் பெருமாள் கோயிலும், நாகநாதர் கோயிலும் உள்ளன. நான்கண்சேரி எனவும் இவ்வூர் குறிப்பிடப்படுகின்றது. ஊரின் வடபுறம் உள்ள குளம் நாகன் என்பவனால் வெட்டப்பட்டது. இங்குள்ள சிவன் நாகநாதர் என வழங்கப்படுகிறார். வானமாமலை என்னும் நாங்குநேரிக்குத் தோத்தாத்திரி என்ற வடமொழிப் பெயரும் உண்டு. தோத்தாத்திரி என்றால் பெருமாள் என்று பொருளாகும். எனவே வானமாமலைக்கு தோத்தாத்திரி என்ற பெயர் இருந்துள்ளது. நான்கு ஏரிகள் இருந்ததால் நான்குனேரி எனப்பட்டதாக மக்கள் கருதுகின்றனர். ஆயினும் நாகன் என்பவன் வெட்டிய ஏரியை உடைய ஊராதலால் இப்பெயர் ஏற்பட்டது என்பதே ஏற்புடையக் கருத்தாகும்.

### சீவலப்பேரி

தென்முக்கூடல் என இலக்கியங்களில் சீவலப்பேரி குறிப்பிடப்படுகிறது. முக்கூடற்பள்ளு இத்தலம் பற்றிய சிற்றிலக்கியமாகும். பொதிகையில் தோன்றும் பொருநை, குற்றால மலையின் சிற்றாறு, கழுகுமலையின் கோதண்டராமநதி ஆகிய மூன்று நதிகள் கூடுமிடம் ஆதலால் முக்கூடல் ஆனது. முற்காலப் பாண்டியனான சடையன்மாறன் கோயிலுக்கு விளக்கெரிக்க 25 ஆடுகள் தானமாக வழங்கிய செய்தி இங்குள்ள பழமை வாய்ந்த அழகர் கோயில் கல்வெட்டில் உள்ளது. அதில், ‘கீழ்க்களக்

கூற்றத்து தெவதானம் தென்திருமாலிருஞ்சோலை நின்றருளின கருமாணிக்கத் தெவர்க்கு திருவிளக்குக்கு...' என்பதில் இவ்வூர் தென் திருமாலிருஞ்சோலை என வழங்கப்பட்டது தெரிகின்றது. கி.பி.12–ஆம் நூற்றாண்டில் மாறவர்மன் ஸ்ரீவல்லபன் இங்கு வெட்டிய ஸ்ரீவல்லபப் பேரேரி என்பதே தற்போது சீவலப்பேரி என்று சுருங்கி வழங்கப்படுகிறது.

## பாளையங்கோட்டை

பாளையங்கோட்டை பொருநையாற்றின் கரையில் அமைந்துள்ள ஊராகும். இங்குள்ள திரிபுராந்தகர் சிவன் கோயில் புகழ்பெற்றது. நாயக்கர் ஆட்சியில் அரியநாதர் முதலியாரால் ஏற்படுத்தப்பட்ட பாளையங்களுள் இவ்வூரும் ஒன்று. படைவீரர்களுக்குரிய ஊர் பாளையம் எனப்பட்டது.

## இராதாபுரம்

வள்ளியூரிலிருந்து கிழக்கில் இராதாபுரம் அமைந்துள்ளது. இராசராசபுரம் என்பதே தற்போது இராதாபுரம் ஆயிற்று என்பர். இவ்வூர் பழமையான வரகுணபாண்டீஸ்வரர் கோயில் உள்ளது. கி.பி. 8–ஆம் நூற்றாண்டில் முற்காலப் பாண்டியன் வரகுண மன்னனால் இக்கோயில் கட்டப்பட்டிருக்கலாம். இக்கோயிலிலுள்ள கல்வெட்டு இவ்வூரினை 'பூசங்குடி வரகுண பாண்டிய நல்லூர்' என்று குறிப்பிடுகிறது.

## வாசுதேவநல்லூர்

தென்காசி மதுரை செல்லும் வழியில் வாசுதேவநல்லூர் அமைந்துள்ளது. இங்குள்ள அர்த்தநாரீசுவரர் கோயில் சங்கரன் கோயிலை விட காலத்தால் பழமையானது. இவ்வூரில் ரோமானியர் காலத்திய காசுகள், பதக்கங்கள் கிடைத்துள்ளன.

## செங்கோட்டை

திருநெல்வேலி மாவட்டத்தின் மிகச்சிறிய வட்டம் செங்கோட்டையாகும். திருவிதாங்கூர் ஆட்சியின் கீழ் இருந்து வந்துள்ளது. இங்குள்ள குலசேகரநாதர் கோயிலும், அழகிய மணவாளப் பெருமாள் கோயிலும் சிறப்பானவைகளாகும்.

# 2. புகழ்பெற்ற திருக்கோயில்கள்

### கிருஷ்ணாபுரம்

பாளையங்கோட்டைக்கு கிழக்கே திருநெல்வேலியில் இருந்து 12 கி.மீ. தொலைவில் கிருஷ்ணாபுரம் அமைந்துள்ளது. இங்குள்ள திருவேங்கடநாத சுவாமி கோயிலில் உள்ள சிற்பங்கள் புகழ்பெற்றவை. மதுரையை ஆண்ட கிருஷ்ணப்ப நாயக்கர் பெயரால் அமைக்கப்பட்ட வீரப்ப நாயக்கர் மண்டபம், அரங்க மண்டபம் ஆகியவற்றில் உள்ள சிலைகள் மிகவும் புகழ்பெற்றவையாகும். சிற்பக்கலையின் எழிலை இக்கோயிலில் கண்டு இன்புறலாம்.

### நெல்லையப்பர் கோயில்

திருநெல்வேலி நகரத்தின் மையத்தில் நெல்லையப்பர் கோயில் அமைந்துள்ளது.

### ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில்

சங்கரன் கோயிலுக்கு 45 கி.மீ. தொலைவில் ஸ்ரீவில்லிபுத்தூர் அமைந்துள்ளது. தமிழக அரசு சின்னமாக விளங்கும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் கோயில் கோபுரம் 196 அடி உயரமுடையது. நாயக்க மன்னர்கள் இக்கோயிலில் பல திருப்பணிகள் செய்துள்ளனர். வைணவப் பெரியார்களான பெரியாழ்வார், ஆண்டாள் வாழ்ந்த பகுதியாகும்.

### திருக்குற்றாலநாதர் கோயில்

திருநெல்வேலியிலிருந்து 50 கி.மீ. தூரத்தில் உள்ள பொதிகைமலைச் சாரலில் அமைந்த இத்தலம் திருஞான சம்பந்தரால் பாடல் பெற்றது. இறைவன் ஆடிய ஐந்து சபைகளுள் குற்றாலம் சித் சபையாகும். இக்கோயிலில் பல அழகிய மண்டபங்களும், கோபுரங்களும் நாயக்கர் காலப் பணிகளாக உள்ளன. கண்ணைக்கவரும் வண்ண ஓவியங்கள் சிறப்பானவைகளாகும்.

### தென்காசி விசுவநாத சுவாமி கோயில்

திருநெல்வேலியிலிருந்து 54 கி.மீ. தொலைவில் தென்காசி அமைந்துள்ளது. தென்காசிப் பாண்டியர்களால் கட்டப்பட்ட காசி விசுவநாத சுவாமி கோயில் 300 வருடங்களுக்கு பழமையானது. இக்கோயிலின் ஒன்பது அடுக்குக் கோபுரம் தனிச் சிறப்பு வாய்ந்தது. பாலசுப்ரமணியர் கோயில் தனிக்கோ்யிலாக இக்கோயிலுக்கு அமைக்கப்பட்டுள்ளது. காசி விசுவநாதருக்கும் லோகாம்பிகை அம்மைக்கும் தனித்தனி கருவறைகள் அமைக்கப்பட்டுள்ளன.

**சங்கரநயினார் கோயில்**

திருநெல்வேலியிலிருந்து 45 கி.மீ. தொலைவில் தென்காசிக்கும் ஸ்ரீவில்லிபுத்தூருக்கும் இடையே அமைந்துள்ளது இக்கோயில். சிவனும் திருமாலும் இணைந்து சங்கர நாராயணராக இங்கு காட்சியளிக்கின்றனர். கோமதி அம்மனின் ஆடித்தபசு மிகவும் சிறப்பு வாய்ந்தது. இத்திருநாள் பெருந்திருவிழாவாக நடைபெறும். இக்கோயிலை ஆவுடையம்மன் கோயில் என்றும் அழைப்பர்.

**திருக்குறுங்குடி நம்பி திருக்கோயில்**

திருநெல்வேலியிலிருந்து 43 கி.மீ. தூரத்தில் மகேந்திரமலை அடிவாரத்தில் அமைந்துள்ள இக்கோயில் 108 வைணவத்தலங்களுள் ஒன்றாகும். நம்மாழ்வார் இத்தலத்தினைப் பாடியுள்ளார். நம்பியாண்டார் நம்பிக்கு இவ்வூர் பெருமாள் காட்சியருளியுள்ளார். பல விழாக்கள் சிறப்பாக நடைபெறும் இக்கோயிலின் சிற்பங்கள் கிருஷ்ணாபுரத்தைப் போன்று சிறப்பு வாய்ந்தவைகளாகும்.

**நவதிருப்பதி கோயில்கள்**

ஸ்ரீவைகுண்டம், வரகுணமங்கை, திருப்புளியங்குடி, திருக்குளந்தை, இரட்டைத் திருப்பதி (தொலைவிலி மங்கலம், தென்திருப்பேரை), திருக்கோளூர், ஆழ்வார் திருநகரி ஆகிய ஒன்பது கோயில்களும் ஸ்ரீவைகுண்டம் வட்டம் மற்றும் திருச்செந்தூர் வட்டத்தில் அமைந்துள்ளன. நவதிருப்பதிகளான இந்த ஒன்பது வைணவக் கோயில்களும் பாண்டிய மன்னர்களின் அறக்கொடைகளைப் பெற்றுள்ளன.

**பிரம்மதேசம்**

கைலாசநாதர் கோயில் பழமையானது. வீரப்ப நாயக்க மன்னர் காலத்தில் ஐயங்கர நாயக்கரால் கட்டப்பெற்ற ஐந்து நிலை கோபுரம் உடையது. இக்கோயில் இங்குள்ள சபாபதி மண்டபத்தின் அதிட்டானத்தில் புராணச் சிற்பங்கள் காட்டப்பட்டுள்ளன. சோமவார மண்டபத்தை ஆமை சுமப்பது போன்று வடிவமைத்துக் காட்டப்பட்டுள்ளது.

**திருவாலீசுவரம் கோயில்**

மத்தியதொல்பொருள் துறையின் கீழ் இக்கோயில் உள்ளது. சிற்பங்கள் மிகுந்துள்ள இக்கோயிலின் பழமையான கல்வெட்டு முதலாம் இராஜராஜன் சோழன் காலத்தியதாகும். எனவே இக்கோயில் அம்மன்னனால் கட்டப்பட்டிருக்கலாம் என்று கருதப்படுகின்றது.

**திருப்புடைமருதூர் கோயில்**

தட்சிணபுடார்ச்சுனம் எனப்படும் திருப்புடைமருதூர் மருதமரங்கள் நிறைந்துள்ள ஊராகும். இது வடமொழியில் புடார்ச்சுனம் எனப்பெறும். இங்கு தண்பொருநையாறு

உடன் கடனாநதி கலக்கிறது. இவ்வாற்றங்கரையில் அமைந்துள்ள இக்கோயிலின் இறைவன் நாறும்பூநாதர், அம்மை கோமதி அம்மாள். ஆலயத்தைச் சுற்றி பெரிய மதிலும், கிழக்கே பெரிய கோபுரமும் காட்சியளிக்கின்றன.

### சேரன்மகாதேவி

நெல்லை மாவட்டத்திலுள்ள ஒன்பது கைலாயங்களில் இதுவும் ஒன்றாகும். பராந்தக பாண்டியனின் மனைவியான சேரமன்னனின் மகள் பெயரால் நிர்மாணிக்கப்பட்ட ஊர் இதுவாகும். இக்கோயிலின் இறைவன் அம்மைநாதர், இறைவி ஆவுடையம்மை. இக்கோயிலில் உள்ள உடன்பிறந்தாள் சிற்பம் உரல் உலக்கைகளுடன் காட்சியளிக்கின்றது.

## குடைவரைக் கோயில்கள்

தமிழகத்தில் பாண்டியர், பல்லவர்களால் தோற்றுவிக்கப்பட்ட 40 குடைவரைக் கோயில்களில் ஏழு குடைவரைக் கோயில்கள் நெல்லை மாவட்டத்திலேயே உள்ளன.

### 1.மலையடிக்குறிச்சி

இக்கோயில் சங்கரன்கோயில் புளியங்குடிப் பாதையில் தாருகாபுரத்தின் அருகிலுள்ளது. ஒரு சிறிய கருவறையும், அதற்கு முன் ஒரு செவ்வக அறையுமுள்ளன. அவற்றிற்கு முன் பிற்காலத்தில் கட்டப்பெற்ற மண்டபமுள்ளது. கருவறையில் சதுர ஆவுடையாருடன் கூடிய இலிங்கத் திருமேனி உள்ளது. இங்குள்ள கல்வெட்டிலிருந்து மாறன் சேந்தனின் காலத்தில் (கி.பி.617) அரசனின் ஆணைப்படி, ‘பாண்டிமங்கல அதி அரையன் சேவூர்கிழான் சாத்தன் ஏறன்’ என்பவன் அமைத்தான் என்று அறிய முடிகிறது.

### 2.கழுகுமலை

இங்குள்ள குடைவரைக் கோயில் இருதளங்களையுடையது. கருவறையில் முருகப்பெருமான் எழுந்தருளியுள்ளார். கருவறைக்கு முன்னே செவ்வக அறையுமுள்ளது. அதற்கு முன்னுள்ள பகுதி பிற்காலத்தைச் சார்ந்தது. மலையின் மேலே ஒரு குடைவரைக் கோயிலில் ஐயனார் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளார். மற்றொன்று வெறும் குகையாகும்.

### 3.திருமால்புரம்

தென்காசி வட்டம் கடையநல்லூரிலிருந்து சேந்தமங்கலம் செல்லும் பாதையில் இக்கோயிலுள்ளது. தரையிலிருந்து சற்று உயரமான இடத்தில் ஒரு தளமும் முன்னால் சிறிது இடைவெளியுமுள்ளதாக இக்கோயிலமைக்கப் பெற்றுள்ளது.

குடைவரையில் வாயிற்காவலர், சிதைந்த நந்தி, விநாயகர், திருமால், ஆடவல்லான் ஆகிய புடைப்புச் சிற்பங்களுள் முற்காலப் பாண்டியர்களின் வண்ண ஓவியங்களையும் இங்கு காணலாம்.

## 4. சொக்கம்பட்டி

தென்காசி வட்டத்தில் மதுரை தென்காசிப் பெருவழியில் சொக்கம்பட்டி ஊரருகே, கருப்பா நதி அணைக்கட்டிற்குச் செல்லும் வழியில் பேச்சியம்மன் கோயில் என்ற பெயரில் இக்குகைக் கோயில் உள்ளது. இவ்விரு தளக் கோயிலில் வாயிற்காவலர் போல எதிரெதிரே இரு சிற்பங்கள் நின்ற நிலையிலுள்ளன. ஆனால் அவை முற்றுப்பெறவில்லை ஒன்று ஆண், மற்றொன்று பெண் சிற்பங்களாகும். இதனை சமணக் கோயிலென்பார் திரு. கே.வி. சௌந்தரராசன். பிறர் இந்துக் கோயிலென்பர். ஒரு சிற்பம் இன்றும் பேச்சியம்மன் என்ற பெயரால் இன்று வழிபடப் பெறுகிறது.

## 5. வீரசிகாமணி

சங்கரன் கோயிலிருந்து சேந்தமங்கலம் செல்லும் வழியில் இவ்வூர் உள்ளது. ஊருக்கு மேற்கே குடைவரைக் கோயிலுள்ளது. பாறையின் தெற்குப் பகுதியில் புடைப்புச் சிற்பமாக விநாயகர் காணப்படுகிறார். இவரது துதிக்கை இட, வலப்புறச் சுழியின்றி நீண்டு தொங்கிய நிலையிலுள்ளது குறிப்பிடத்தக்கது. கருவறையில் தரையுடன் செதுக்கப்பெற்ற சிவலிங்கமும், பாண்டியர் குடைவரைக் கோயிலுக்கேயுரிய அபிடேகநீர் வெளியேறுவதற்கான மடை வசதியுமுள்ளது. சில சிற்பங்கள் நின்ற நிலையிலுள்ளன.

## 6. திருச்செந்தூர்

திருச்செந்தூரிலுள்ள 'வள்ளி ஒளிந்த குகை' எனப்படும் குடைவரை பிற்காலத்திய மண்டபமும், குகையினுள்ளே சிறிய கருவறையும், அதைச்சுற்றி மிகச் சிறிய திருச்சுற்றுமுள்ளது.

## 7. கங்கைகொண்டான்

திருநெல்வேலி மாவட்டத்தில் கங்கைகொண்டான் ஊருக்கருகே ஒரு கி.மீ. தூரத்தில் பாறைச்சரிவில் இருகுடைவரைக் கோயில்கள் அமைக்கப்பெற்றுள்ளன. ஒரு குடைவரை முழுமை பெறவில்லை. மற்றொன்றில் பாறையில் குடையப்பெற்ற புடைப்புச் சிற்பமாக இலிங்கம் உள்ளது. மேலும் இங்கு விநாயகர், மூத்ததேவி சிற்பங்களும் சிதைவுற்ற நிலையில் காணப்படுகின்றன.

# 3. இராஜாக்கள்மங்கலம் வரலாறு

இராஜாக்கள்மங்கலம் என்னும் கிராமம் திருநெல்வேலி – நாகர்கோயில் பிரதான சாலையில் அமைந்துள்ள தளபதி சமுத்திரம் என்னும் ஊரிலிருந்து சுமார் 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

## தொல்லியல் சிறப்பு

இவ்வூரிலுள்ள இரணியன் குடியிருப்பு என்ற பகுதி தொல்லியல் சிறப்புடையதாகும். இங்கு முற்கால பாண்டியர் காலத்தைச் சார்ந்த பல சிலைகள் காணப்படுகின்றன. இவை உருவில் பெரியவை. அழகில் சிறந்தவை. இவற்றுள் சில மதுரை திருமலை நாயக்கர் அரண்மனையில் உள்ள அருங்காட்சியகத்துக்கு எடுத்துச் செல்லப்பட்டுள்ளன. சிலைகள் பலவற்றுள் அவற்றின் பெயர்கள் கிரந்த எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. சிலைகள் உள்ள இவ்விடத்தில் இரணிய மகாராஜாவின் அரண்மனை இருந்ததாகக் கூறுகின்றனர்.

இராசாக்கள்மங்கலம் ஊர் நம்பி ஆற்றின் வடகரையிலும் அகழாய்வு செய்யும் இடத்திலிருந்து 3 மீட்டர் தூரத்திலும் உள்ளது. இந்த ஊரின் வடக்குப்பகுதியில் ஒரு மண்மேடு காணப்படுகின்றது. இதன்கிழக்குப் பகுதியில் சிவன் கோயில் ஒன்று காணப்படுகின்றது. இக்கோயிலின் அருகில் வரலாற்றுச் சிறப்புமிக்கக் காலத்தைச் சேர்ந்த பானை ஓடுகள் அதிக அளவில் காணப்படுகின்றன. கோயில் விதானம் வரை கருங்கல்லில் கட்டப்பட்டுள்ளது. தற்போது புதுப்பிக்கப்பட்டுள்ளது. ஆனாலும் பழமை மாறாது உள்ளது. கருவறை, அர்த்தமண்டபம், முகமண்டபம், போன்ற அமைப்பும், உபபீடம், அதிட்டானம், கால், போதிகை போன்ற அமைப்புகளும் காணப்படுகின்றன. இதன் அமைப்பினைக் கொண்டு பார்க்கும்போது பிற்காலப்பாண்டியர்களின் காலத்தில் கட்டப்பட்டிருக்க வாய்ப்புகள் உள்ளன.

இக்கோயிலின் மேற்குத்திசையில் விஷ்ணு கோயில் ஒன்றும் புதுப்பித்துக் கட்டப்பட்டுள்ளது. இதுவும் கல்லால் கட்டப்பட்டது. இவ்வூரின் அருகில் உள்ள தளபதி சமுத்திரம் என்ற ஊரிலுள்ள கல்வெட்டில் "நாட்டாற்றுப்போக்கில் இராசாக்கள் மங்கலம்" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு எல்லைக்கல் ஒன்றும் காணப்படுகின்றது. இக்கல்லில் மேல் பகுதியில் சக்கரமும். அதன் கீழ்ப்பகுதியில் சிவலிங்கமும் செதுக்கப்பட்டுள்ளன. மண்மேட்டில் வரலாற்றுக்கால மட்கலன்களும், சந்தனக்கல் போன்றவை காணப்படுகின்றது.

கள ஆய்வில் நம்பியாற்றின் குறுக்கே இரண்டு இடங்களில் தடுப்பு அணைகளாகக் கட்டப்பட்டுள்ளன. அகழாய்வு குழிக்கருகில் காணப்படும் தடுப்பணை ஆற்றின் இடையே நேராகக் கட்டாமல் சாய்வான நிலையில் கட்டப்பட்டுள்ளது. சிதைந்த நிலையில் காணப்படுகிறது. பெரிய பெரிய கற்களை உடைத்து கொண்டுவந்து தடுப்பணையைக் கட்டியுள்ளனர். அதன்பின்னர் அந்த கற்களின் இடையில் செங்கற்களையும், சுண்ணாம்பையும் கொண்டு கெட்டிப்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு தடுத்ததால் தேங்கிய நீர் வாய்க்கால் வழியாக விவசாயத்திற்கு பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

மற்றொரு தடுப்பணை சுமார் 1 கி.மீ தூரத்தில் காணப்படுகின்றது. இங்கு நம்பி ஆறு பரந்து விரிந்து ஓடுகின்ற காரணத்தால் இங்கும் கற்களைக் கொண்டுவந்து தடுப்பணைக் கட்டப்பட்டுள்ளது. இங்குள்ள கற்கள் முதலில் கூறப்பட்ட அணையில் இருந்த கற்களைவிட சிறியன. இதிலிருந்து தெற்கு நோக்கி ஓடுகின்ற வாய்க்கால் ஒன்று இங்கும் காணப்படுகின்றது. இந்த வாய்க்கால் அருகிலுள்ள குளங்கள் மற்றும் ஏரிகளுடன் இணைக்கப்பட்டிருக்கலாம். இந்த வாய்க்கால் இரணியன் குடியிருப்பை இரண்டு பகுதிகளாகப் பிரித்துள்ளது. வாய்க்காலின் வடபகுதி “இரணியன் குடியிருப்பு” என்றும் தென்பகுதி “மயிலா புதூர்” என்றும் பெயரிடப்பட்டுள்ளன. இப்பகுயில் மயில்கள் அதிகமுள்ளதால் இப்பெயர் வந்திருக்கலாம்.

நம்பி ஆற்றின் கரையில் இவை அமைந்துள்ளன என்பதும் கி.பி. 8–ஆம் நூற்றாண்டிலிருந்து இந்த ஆற்றில் தடுப்பணை கட்டப்பட்டுள்ளது என்பதும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

# 4. முற்காலப் பாண்டியர் வரலாறு

இந்திய தீபகற்பத்தின் தென்கோடியில் அமைந்துள்ளது பாண்டிய நாடு. தெற்கே இந்துமகாக்கடலும், கிழக்கே மன்னார் குடாவும், வடக்கே சோழ கொங்கு மண்டலங்களும், மேற்கே அரபிக் கடலும் நான்கெல்லைகளாக பாண்டிய நாட்டிற்கு அமைந்துள்ளன. மதுரை நகரம் பாண்டிய நாட்டின் தலைநகரமாகும். மகாபாரதம், சங்க இலக்கியங்கள் ஆகியவற்றில் பாண்டியர் குறிப்பிடப்படுகின்றனர். அசோகனது கல்வெட்டுகளில் பாண்டியர் குறிப்பிடப்பட்டுள்ளனர். பாண்டியர்களது கல்வெட்டுகள் கி.பி. 7–ஆம் நூற்றாண்டிலிருந்து 17–ஆம் நூற்றாண்டு வரை கிடைக்கின்றன. இந்தியாவிலேயே கிறிஸ்துவ சகாப்தத்திற்கு முன்பேயிருந்து 17–ஆம் நூற்றாண்டு வரை அரசு கோலோச்சிய பழமையான அரசர்கள் பாண்டியரே ஆவார்கள்.

முற்காலப் பாண்டியர் காலத்திய சங்ககால காசு ஒன்று கிடைத்துள்ளது. இதன் ஒரு பக்கத்தில் குதிரையின் வடிவமும், பெருவழுதி என்று தமிழ்ப்பிராமி எழுத்திலும் பொறிக்கப்பட்டுள்ளது. மறுபக்கத்தில் பாண்டியர்களுக்குரிய இரு மீன் சின்னங்கள் உள்ளன. இக்காசை வெளியிட்ட மன்னன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிப் பாண்டியன் என்று அறியலாம். முதலாம் வரகுணனின் வேள்விக்குடிச் செப்பேடு, பெருவழுதியும் அவனது வம்சத்தவர்களும் களப்பிரர் வருகைக்கு முன் அரசாண்டதாகக் கூறுகிறது.

பாண்டியருக்கு தென்னவன், பஞ்சவன், வழுதி, செழியன் என்ற பட்டப் பெயர்கள் உண்டு. மேலும் பாண்டியர்கள் சடையன், மாறன் என்ற பட்டங்களையும் மாறி மாறி புனைந்து கொள்வர். இந்தியாவின் தென்கோடியில் இருப்பதால் தென்னவன் என்ற பெயர் பொருந்துகிறது. பஞ்சவன் என்றால் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்து நிலங்களுக்குத் தலைவன் என்று பொருள். மலைநாட்டு (குறிஞ்சி) அரசன் கேரளனும் பாண்டிய குலத்தைச் சேர்ந்தவன்தான். இதனைக் கல்வெட்டுகள் 'மீனவனாம் வீரகேரளன்' என்பதாகக் கூறுகின்றன. செல்லிநகர் நம்பியின் திருவிடையாடல் புராணமும் 'ஐந்து நிலத்தோங்கு நகர்கட்கெல்லாம் தலையாய பஞ்சவன் தன் மதுரை நகர்' என்று கூறுகிறது. எனவே பஞ்சவன் என்பது பாண்டியரின் மரபுப் பெயர் என்பதை அறியலாம்.

## பாண்டியன் கடுங்கோன் (கி.பி.575-600)

பாண்டி நாட்டை களப்பிரரிடமிருந்து முதலில் கைப்பற்றி மீண்டும் பாண்டியரது ஆட்சியை மதுரையில் நிலைபெறுமாறு செய்தவன் இப்பாண்டிய மன்னனே ஆவான்.

இவன் களப்பிரரைப் போரிற் புறங்கண்டு அன்னாரது ஆளுகைக்குட்பட்டிருந்த தன் நாட்டைக் காப்பாற்றி அரசு செலுத்திய வரலாற்றை 'களப்ரனென்னுங் கலியரசன் கைக்கொண்டதனை யிறக்கிய பின் படுகடன் முளைத்த பருதி போற் பாண்டியாதிராசன் வெளிப்பட்டு' என்று கடுங்கோனின் வீரத்தையும், புகழையும் வேள்விக்குடிச் செப்பேடுகள் நன்கு விளக்குகின்றன.

## மாறவர்மன் அவனி சூளாமணி (கி.பி.600-625)

இவன் பாண்டியன் கடுங்கோனுடைய மகன் என்று வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன.

## செழியன் சேந்தன் (கி.பி.625-640)

இவன் மாறவர்மன் அவனிசூளாமணியின் புதல்வன். சடையவர்மன் என்ற பட்டம் புனைந்து பாண்டிய நாட்டை அரசாண்டவன். இவனை 'சிலைதடக்கைக் கொலைக் களிற்றுச் செழியன்' எனவும், மண்மகளை மறுக்கடிந்த வேந்தர் வேந்தன்' எனவும், 'செங்கோற் சேந்தன்' எனவும் வேள்விக்குடிச் செப்பேடுகள் புகழ்கின்றன.

## மாறவர்மன் அரிகேசரி (கி.பி.640-670)

செழியன்சேந்தன் இறந்த பின்னர் அவனுடைய புதல்வனாகிய அரிகேசரி என்பான் மாறவர்மன் என்ற பட்டம் புனைந்து ஆட்சி செலுத்தினான். இவனைச் சுந்தரபாண்டியன் எனவும், கூன்பாண்டியன் எனவும் திருவிளையாடற் புராணம் குறிப்பிடுகிறது. இவன் முதலில் சமணமதப் பற்றுடையவனாயிருந்து அம்மதத்தைப் பெரிதும் ஆதரித்து வந்ததாகவும். பிறகு சைவ சமய குரவருள் ஒருவராகிய திருஞான சம்பந்த மூர்த்திகளால் சைவனாக்கப்பட்டான் என்றும் அறியப்படுகிறது.

இவ்வேந்தனது ஆட்சிக்காலத்திற் பாண்டிநாடு உயர்நிலையை அடைந்தது. இவன் சேரர்களையும், பரதவரையும், குறுநில மன்னர் சிலரையும், பாழி, நெல்வேலி, செந்நிலம் முதலான இடங்களில் வென்றனன் என்றும், ஒரு பகலிற் சோழர்க்குரிய உறையூரைக் கைப்பற்றினானென்றும் வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. இம்மன்னன் புரிந்த போர்களைப் பற்றி இறையனார் அகப்பொருளுரையிலுள்ள மேற்கோள்பாடல்களும் (22,106, 235, 309) எடுத்தியம்புகின்றன. தேவார முதலிகளுள் ஒருவரான சுந்தரமூர்த்திகளும், 'நிறைகொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறனடியார்க்கும் அடியேன்' என்ற திருத்தொண்டத்தொகை பாடற்பகுதியில் நெல்வேலிப் போரில் இவன் வெற்றி பெற்ற செய்தியைக் குறித்துள்ளார்.

இவனது ஆளுகையின் தொடக்கத்தில் தான் சீனதேயத்தினனாகிய 'யுவான்சுவான்' என்பான் பாண்டி நாட்டிற்குச் சென்றனன். அவன் தன் வரலாற்றுக்

குறிப்பில் 'பாண்டிநாட்டில் உப்பும் முத்தும் மிகுதியாகக் கிடைக்கின்றன. பக்கத்துத் தீவுகளில் கிடைக்கும் முத்துக்களும் இங்கு கொண்டு வரப்படுகின்றன. இந்நாட்டில் வேறு விளைபொருள்கள் மிகுதியாக இல்லை. இங்கு வெப்பம் மிகுந்துள்ளது. இந்நாட்டு மக்கள் எல்லோரும் கறுத்த மேனியுடையவர்களாயும், உறுதியும், போர்வலிமையும் மிக்கவர்களாயும் இருக்கின்றனர். இந்நாடு வாணிகத்தால் வளம்பெற்றுச் செல்வத்தாற் சிறந்துள்ளது' என்று பாண்டிய நாட்டைப்பற்றித் தான் நேரில் அறிந்தவற்றை எழுதியுள்ளார்.

இம்மன்னன் இரணிய கர்ப்பதானமும், துலாபாரதானமும் செய்து பெருமை பெற்றான் என்றும் வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன.

## கோச்சடையன் இரணதீரன் (கி.பி.670-710)

மாறவர்மன் அரிகேசரியின் மகனாகிய கோச்சடையன் இரணதீரன் அரியணை ஏறினான். இவனை வானவன், செம்பியன், மதுர கருநாடகன், கொங்கர்கோமான், மன்னர்மன்னன் எனவும் பலவாறாக வேள்விக்குடிச் செப்பேடுகள் புகழ்ந்துரைக்கின்றன. இவன் கடல் போன்ற பெரும் படையையுடைய ஆய்வேளை மருதூர்ப் போரில் வென்றனன் என்றும், மங்கலபுரத்தில் மாரதரைப் பொருதழித்த புகழுடையான் இம்மன்னன் என்பதும் வேள்விக்குடிச் செப்பேடுகளால் அறியப்படுகின்றது. மேலைச்சாளுக்கிய வேந்தனாகிய முதல் விக்கிரமாதித்தனையே கி.பி.674–ஆம் ஆண்டில் இவன் மங்கலபுரத்தில் போரில் வென்றான். இம்மன்னன் காலத்தில் தான் சைவசமயக் குரவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாள் நாயனாருடன் மதுரைக்கு வந்து, திருவாலவாய் இறைவனையும், பரங்குன்றத்து இறைவனையும் பாடிப் பணிந்தேத்தினார்.

## அரிகேசரி பராங்குச மாறவர்மன் (கி.பி.710-765)

கோச்சடையனுடைய புதல்வனான இவன் தன் பாட்டனார் பெயராகிய அரிகேசரி என்ற பெயருடையவன். மாறவர்மன் என்ற பட்டம் புனைந்து அரசாண்டவன். இவனை முதலாம் இராஜசிம்மன் எனவும், 'தேர்மாறன்' எனவும் வழங்குவதுண்டு. குழும்பூர், நெடுவயல், குறுமடை, மன்னிக்குறிச்சி, திருமங்கை, பூவலூர், கொடும்பாளூர், பெரியலூர் என்னும் ஊர்களில் நடைபெற்ற போர்களில் இவன் பல்லவ மன்னனைத் தோற்கடித்தான் என்று தெரிகின்றது. நென்மேலி, மண்ணை முதலிய இடங்களில் நிகழ்ந்த போர்களில் பாண்டியனைப் பல்லவ மன்னன் வென்றனன் என்று திருமங்கையாழ்வார், கச்சிப்பரமேச்சுர விண்ணகரப் பதிகத்தில் கூறியிருக்கின்றார். இச்செய்தி நந்திவர்மப் பல்லவமல்லனது உதயேந்திரச் செப்பேடுகளிலும் சொல்லப்பட்டுள்ளது. இவன் மழ கொங்கு நாட்டைக் கைப்பற்றி அந்நாட்டு மன்னன் தனக்குக் கப்பஞ்செலுத்தி வருமாறு செய்தனன் என்றும்,

கங்க அரசன் மகள் பூசுந்தரியை மணந்து கொண்டனன் என்றும் வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. கொங்கு நாட்டு படையெடுப்பின் போது திருப்பாண்டிக் கொடுமுடி இறைவனுக்கு பொற்குவியலும், நவமணித்திரளும் கொடையளித்துள்ளான்.

## நெடுஞ்சடையன் பராந்தகன் (கி.பி.765-790)

சடையவர்மன் என்னும் பட்டம் கொண்ட இம்மன்னன் அரிகேசரி பராங்குச மாறவர்மனின் மகனாவான். இதுவரை கிடைத்துள்ளவற்றுள் இம்மன்னனது கல்வெட்டுகளும், செப்பேடுகளும் தான் காலத்தால் பழமையானவைகளாகும். வேள்விக்குடிச் செப்பேடுகள், சீவரமங்கலச் செப்பேடுகள், ஆனைமலைக் கல்வெட்டுகள், திருப்பரங்குன்றத்துக் கல்வெட்டுகள் ஆகியன பாண்டியர் வரலாற்றை அறிய உதவும் சாசனங்களாகும். இம்மன்னன் பல்லவ அரசனை பெண்ணாகடத்துப் போரில் வென்றதையும், ஆய்வேள், குறும்பர் ஆகிய சிற்றரசர்களை வென்றதையும் வேள்விக்குடிச் செப்பேடுகள் கூறுகின்றன. இவனுடைய சீவரமங்கலச் செப்பேடுகள் வெள்ளூர், விண்ணம், செழியக்குடி என்ற ஊர்களில் இவன் பகைவர்களை அழித்தமையும், ஆயிரவேலியயிரூர், புகழியூர் என்ற இடங்களில் அதியமானை வென்றதையும் கூறுகின்றது. பராந்தக நெடுஞ்சடையன் தென்திசையில் தான் வென்ற பகுதிகளை பாதுகாத்தற் பொருட்டு, 'களக்குடி நாட்டுக் களக்குடியான கரவந்தபுரம்' என்னும் நகரை அமைத்து, பெரும்படையொன்றை அங்கு வைத்திருந்தான் என அறிகிறோம். தற்போது திருநெல்வேலியில் உள்ள உக்கிரன் கோட்டை என்று அந்நகரம் அறியப்படுகிறது.

பாண்டியருள் வைணவ நெறியை கடைபிடித்த பெருவேந்தன் இவன் ஒருவனே. 'பரம வைஷ்ணவன் தானாகி நின்றிலங்கு மணிநீண்முடி நிலமன்னவன்' என்று சீவரமங்கலச் செப்பேடுகள் கூறுகின்றன. இவன் ஆட்சிக்காலத்தில் வைணவப் பெரியாரான பெரியாழ்வார் பாண்டிய நாட்டில் வாழ்ந்திருந்தார். மேலும் இம்மன்னன் அதியமானது கொங்குநாட்டைக் கைப்பற்றிய பிறகு அங்குள்ள காஞ்சிவாய்ப் பேரூரில் திருமாலுக்கு குடைவரைக் கோயில் ஒன்றை எடுப்பித்துள்ளான்.

## மாறன்காரி

பராந்தக நெடுஞ்சடையனின் அரசியல் தலைவர்களுள் சிலர் செப்பேடுகளிலும், கல்வெட்டுகளிலும் குறிக்கப்பெற்றுள்ளனர். அவர்களுள் முதல் அமைச்சனாகிய மாறன்காரி கரவந்தபுரமாகிய களக்குடியில் மாறன் என்பவனுக்கு மகனாகத் தோன்றியவன். வைத்தியகுலத்தைச் சேர்ந்தவன். மதுரகவி என்னுஞ் சிறப்புப் பெயருடையவன். இவன் ஆனைமலையில் நரசிங்கப் பெருமாளுக்கு கி.பி.770–ஆம் ஆண்டில் குடைவரைக் கோயில் ஒன்றை எடுப்பித்தான்.

## மாறன் எயினன்

மாறன் காரியின் தம்பியான இவன் காரி இறந்தபிறகு பாண்டிய மன்னனுக்கு முதல் அமைச்சனாக இருந்தவன் பாண்டி மங்கல விசையரையன் என்னும் பட்டம் பெற்றவன். ஆனைமலை நரசிங்கப் பெருமாள் கோயிலுக்கு முகமண்டபம் ஒன்றமைத்து கடவுண் மங்கலம் செய்து வைத்தான் என்று இங்குள்ள கல்வெட்டு தெரிவிக்கிறது.

## சாத்தன் கணபதி

கரவந்தபுரத்தைச் சேர்ந்த வைத்திய குலத்தினான சாத்தன் என்பவனுடைய மகன். பராந்தகப் பாண்டியனின் ஆட்சியில் எல்லாப் படைகட்கும் மாசாமந்தனாக படைத்தலைவனாக விளங்கியவன். இவன் திருப்பரங்குன்றம் கோயிலுக்குத் திருப்பணி புரிந்து அங்குள்ள திருக்குளத்தையும் திருத்தி அறச்செயல்களையும் ஒழுங்குபடுத்தினான் என்பதையும், அவன் மனைவி நக்கன் கொற்றி என்பாள் இக்கோயிலில் துர்க்கைக்கும், சேட்டைதேவிக்கும் கோயில் அமைத்தாள் என்பதையும் இவ்வூரிலுள்ள பராந்தகனது ஆறாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று கூறுகின்றது.

## இரண்டாம் இராசசிம்ம பாண்டியன் (கி.பி.790-792)

இவ்வேந்தன் பராந்தக நெடுஞ்சடையனுடைய புதல்வன். இவன் பெயரை மட்டும் சின்னமனூர்ச் செப்பேடுகள் கூறுகின்றன. வேறு செய்திகள் இல்லை. இவன் ஆட்சிக்காலம் மிகக்குறுகியதும், வரலாற்று நிகழ்வுகள் அற்றதுமாய் இருந்திருக்க வேண்டும்.

## வரகுணமகாராசன் (கி.பி.792-835)

இரண்டாம் இராசசிம்ம பாண்டியனின் மகனான இவன் சடையவர்மன் என்ற பட்டம் புனைந்து ஆட்சி புரிந்தவன். 'கொற்றவர்கள் தொழு கழற்காற் கோவரகுண மகாராசன்' என்று சின்னமனூர்ச் செப்பேடுகள் இம்மன்னனைப் புகழ்ந்து கூறுகின்றன. சோழமண்டலம் முழுவதும் இவனது ஆட்சிக்குட்பட்டிருந்தது என்பதை சோழநாட்டிலுள்ள திருவிசலூர், திருநெய்த்தானம், ஆடுதுறை, கும்பகோணம், செந்தலை, திருச்சி, திருக்கோடிகா, திருச்சோற்றுத்துறை ஆகியவிடங்களில் உள்ள இவனது கல்வெட்டுகள் மூலம் அறியமுடிகிறது. இவன் காலத்திலிருந்த பல்லவ வேந்தனாகிய தந்திவர்மன் என்பவன் தன் தொண்டைமண்டலப் பகுதியை இவன் வசம் இழந்தான்.

வரகுண பாண்டியனின் காலத்தில்தான் திருவாதவூரடிகளான மாணிக்கவாசகப் பெருமான் இருந்தார் என்பதை அவர் பாடிய திருக்கோவையாரில் இம்மன்னனை புகழ்ந்துரைப்பதில் இருந்து அறியலாம். பட்டினத்தடிகளும் தாம் பாடிய திருவிடைமருதூர் மும்மணிக் கோவையில் ஒருபாடலில் இவனின் அரும்பெருந்தொண்டுகளை எடுத்துக்

கூறியுள்ளார். சைவத் திருமுறைகளைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பி கோயில் திருப்பண்ணியர் விருத்தத்தில் புகழ்ந்துள்ளார். அம்பாசமுத்திரம், ஏர்வாடி, கழுகுமலை, தளபதி சமுத்திரம் ஆகிய ஊர்களில் இம்மன்னனது கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

## சீமாறன் சீவல்லபன் (கி.பி.835-862)

சீமாறன் முதலாம் வரகுண பாண்டியனின் மகன் ஆவான். புதுக்கோட்டை நாட்டிலுள்ள சித்தன்னவாசல் சமணரது குகைக்கோயிலில் காணப்படும் கல்வெட்டொன்று, 'பார் முழுதாண்ட பஞ்சவர் குலமுதல் ஆர்கெழுவை வேல் அவனிபசேகரன் சீர்கெழு செங்கோல் சீவல்லபன்' என்று இவனைப் புகழ்ந்துரைக்கிறது. இம்மன்னன் குண்ணூர், சிங்களம், விழிஞம் போன்ற இடங்களில் போர் நிகழ்த்தி வென்றதையும், குடமூக்கில் வந்தெதிர்த்த கங்கர், பல்லவர், சோழர், கலிங்கர், மகதர் ஆகிய அரசர்களை வென்றதையும் சின்னமனூர்ச் செப்பேடுகள் கூறுகின்றன.

ஈழநாட்டின் மீது படையெடுத்து அங்கு ஆட்சிபுரிந்து கொண்டிருந்த முதல்சேனனை வென்று பல நகரங்களைக் கொள்ளையிட்டு, புத்த விகாரங்களிலிருந்த அனைத்துச் செல்வங்களையும் கவர்ந்தான் என்று மகாவம்சம் என்னும் இலங்கை வரலாற்று நூல் மூலம் அறியப்படுகிறது. தெள்ளாற்றுப்போர், குடமூக்குப் போர், அரிசிற்கரைப் போர் ஆகியன பல்லவரோடு இவ்வேந்தன் நடத்தியப் போர்களாகும். இவன் சிறப்புப் பெயரால் அவனிபசேகரமங்கலம் என்னும் ஊர் ஒன்று திருச்செந்தூர்க்கு அண்மையில் இருந்தது என்பது அவ்வூர்க் கல்வெட்டொன்றால் அறியப்படுகின்றது. 'அவனிபசேகரன் கோளகை' என்னும் பொற்காசு இவனது ஆட்சியில் வெளியிடப்பட்டு உள்ளது.

## இரண்டாம் வரகுணவர்மன் (கி.பி.862-880)

சீமாறன் சீவல்லபனுடைய முதல் மகன் ஆவான். சடையவர்மன் என்னும் பட்டத்துடன் ஆட்சிக்கு வந்து 'குரைகழற்கா லரைசிறைஞ்சக் குவலயதலத் தனதாக்கின வரைபுரையு மணி நெடுந்தோள் மன்னர்கோன் வரகுணவர்மன்' என்று சின்னமனூர்ச் செப்பேடுகள் புகழ்ந்துரைக்கும் மன்னன் இவனே. கி.பி.880–ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பெரும்படையுடன் சோழமண்டலத்தில் காவிரியாற்றின் வடக்கேயுள்ள மண்ணி நாட்டிலிருந்த இடவை என்ற நகரைக் கைப்பற்றினான். இவன் ஆட்சியின் போது நடைபெற்ற திருப்புறம்பியப் போர் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. இதில் கங்க மன்னன் பிருதிவிபதி கொல்லப்பட்டான். எனினும் வரகுணன் தான் வெற்றி பெற்ற சோழமண்டலப் பகுதியை இழக்க நேர்ந்தது. இம்மன்னன் திருச்செந்தூர் முருகனுக்கு பல நிவந்தங்களை அளித்துள்ளான்.

கழுத்தணிகளும், மார்பில் கச்சையும், இடமார்பின் வழிசெல்லும் முப்புரிநூலும் கொண்டு விளங்குகிறார். கைகளில் தோள்வளை, கடகம், முன்வளைகள் அணிசெய்கின்றன. கணுக்கால் வரை நீண்ட ஆடை தெரிகிறது.

### அக்னி

நான்கு கைகளுடன் காட்டப்பட்டுள்ள இச்சிற்பம் வயிற்றுக்குக் கீழ்ப்பகுதி இழந்துள்ளது. பூரிமத்துடன் கூடிய கரண்டமகுடமும் பாதிக்குமேல் உடைந்துள்ளது. முகம் முழுவதும் சிதைந்து, உடைந்துள்ளது. நான்குகைகளில் மேற்கைகளில் இடதில் கெண்டியும், வலதில் காட்டப்பட்டுள்ளது. கீழ் வலதுகை முத்திரை உடைந்துள்ளது. கீழ் இட்து கையும் உடைந்துள்ளது. இடமார்பின் வழியே யக்ஞோபவீதம் செல்கிறது. இதன் முடிச்சு இடமார்பில் விளங்குகிறது. கழுத்தில் சரப்பளியும் தெரிகிறது. கைகளில் கற்கடகமும், முன்வளைகளும் விளங்குகின்றன.

### தேவி

பீடத்தின் மேல் அமர்வு நிலை. இடது காலை தொங்கவிட்டு, வலதுகாலை மடக்கி வைத்தபடி இரண்டு கைகளுடன் தேவி காட்டப்பட்டுள்ளாள். வலது கையில் மலர் அல்லது கிளி போன்று தெரிகிறது. இடது கை முத்திரை சிதைந்துள்ளது. கரண்டமகுடம் நெற்றிப்பட்டையோடு காட்டப்பட்டுள்ளது. காதுகளில் குண்டலங்களும், மார்பின் மையத்திலிருந்து வயிற்றின் இருபுறமும் சன்னவீரம் போன்று அணிகலன் அணிசெய்கிறது. கழுத்தணி, கையணிகள் சிதைந்துள்ளன. இடைக்கட்டு தெரிகிறது.

### தேவி

வலதுகாலை மடக்கி, இடது காலை குத்துக்காலிட்டு இரண்டு கைகளுடன் விளங்கும் தேவியின் சிற்பம் ஒன்று எழிலார்ந்தது. இச்சிற்பத்தின் அமர்வு நிலை நோக்கும் பொழுது இறைவருக்கு இடதுபக்கத்தில் அமர்ந்த தேவியாய் இருக்கலாம். கரண்டமகுடம் பூரிமத்துடன் விளங்க, காதுகளில் பத்ரகுண்டலங்கள், கழுத்தில் சரப்பளி, சவடி ஆகிய அணிகளும், கைகளில் கடகவளை, முன்வளைகளும் துலங்க, கணுக்கால் வரை நீண்ட ஆடையின் முடிச்சு பின்புறம் தெரிகிறது. இடது தோள்களில் நீண்ட சுருள் கூந்தல் வழிந்தோடுகிறது. இத்தேவியின் அமர்வு மிகவும் மென்மை வாய்ந்ததாகக் காட்டப்பட்டுள்ளது.

### திசைக்காவலர்

பீடத்தில் வலது காலை மடக்கி, இடதுகாலை தொங்கவிட்டு அமர்வு நிலை. இரண்டுகைகளில் இடது கை இடது தொடை மீதும், வலது கை சூசி முத்திரையும் கொண்டுள்ளது. பூரிமத்துடன் கூடிய கிரீடமகுடம் நெற்றிப்பட்டையுடன் விளங்குகிறது.

# 5. இராஜாக்கள்மங்கல அகழாய்விடத்தில் கிடைத்த முற்கால பாண்டியர் சிற்பங்கள்

இராஜாக்கள்மங்கலத்தில் முதன்முதலில் மேற்பரப்பாய்வில் கண்டெடுக்கப்பட்டு, தற்போது மதுரை திருமலை நாயக்கர் அரண்மனையின் அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ள கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த முற்காலப் பாண்டியர்களின் சிற்பக் கலையின் எழிலுருவங்களாய் கீழ்க்காணும் சிற்பங்கள் திகழ்கின்றன. இவை 1979–ஆம் ஆண்டு மதுரை பதிவு அலுவலராக இருந்த திரு. மா. சந்திரமூர்த்தி அவர்களால் 10 சிலைகளும், 1986–ஆம் ஆண்டு திருநேல்வேலி தொல்லியல் அலுவலர் முனைவர் செந்தில் செல்வக்குமரன் அவர்களால் 15 சிலைகளும் சேகரிக்கப்பட்டவைகளாகும். இச்சிற்பங்களில் பெரும்பாலானவை வைணவச் சிற்பங்கள் என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் அவை அளவில் பெரியனவாகவும், தனித்த கலைப்பாணி உடையனவாகவும் திகழ்கின்றன. மேலும் நெல்லை அரசு அருங்காட்சியத்தில் உள்ள 6 சிலைகள் அகழாய்வுக்கு முன்பு சேகரிக்கப்பட்டு காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

## நரசிம்மர்

சுகாசனத்தில் அமர்ந்த நிலையில் உள்ள இச்சிற்பம் கி.பி. 8–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது. சுமார் 4 அடி உயரமும் 3 அடி அகலமும் கொண்ட சிற்பம் இது. தலைப்பகுதி சிம்மவடிவிலும், அதன் பிடரி மயிர் கழுத்தின் கீழ் பரந்து படிந்துள்ள நிலையிலும் உள்ளது. வாய் நன்கு திறந்து அச்சமூட்டும் தன்மையில் காட்டப்பட்டுள்ளது. பின்புறக் கரங்களில் பிரயோகச் சக்கரமும், சங்கும் தாங்கியிருக்க, கீழ் வலக்கரம் காக்கும் கரமாகவும், கீழ் இடக்கரம் தொடைமீது வைத்து அமர்ந்த நிலையிலும் உள்ளது. மூன்று பட்டைகளுடன் கூடிய புரிநூல், பட்டையான உதரபந்தம், கடிசூத்திரத்துடன் கூடிய ஆடை, கைகளில் கனமான காப்புகள், தோள்களில் கேயூரம் என்னும் அணிகலன்கள் அழகு செய்கின்றன. பாதம் வரை ஆடை காணப்படுகின்றது. பத்ர பீடத்தில் அமர்ந்துள்ள நிலையில் வடிக்கப்பட்டுள்ளது.

## அணங்குகள்

இச்சிற்பங்கள் கி.பி. 8–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. வலக்காலை மடித்து வைத்து இடக்காலைக் குத்துக்காலாக ஊன்றி, அமர்ந்துள்ள அழகிய இளம் பெண்கள்,

தலையில் கரண்டமகுடம், காதுகளில் பத்ரகுண்டலம், கழுத்தில் இரண்டு வித மணிமாலைகள், ஒற்றைப்புரிநூல் ஆகியவை அழகுக்கு அணி சேர்க்கின்றன. இருகரங்களில் இடக்கையில் தாமரை மலர் பிடித்திருக்க வலக்கை தொடைமீது வைத்து அமர்ந்த நிலையில் எழிலார்ந்த இளமங்கையராகக் காட்சித் தருகின்றனர்.

**புதன்**

புதன் பீடத்தின் மேல் வலது காலை மடக்கி, இடதுகாலை நேராக தொங்கவிட்டு அமர்ந்துள்ளார். தலை உடைந்துள்ளது. இரண்டு கைகளில் வலது கை அபயமாகவும், இடது கை இடது தொடைமேல் வைத்துபடி நேரான அர்த்த பத்மாசன அமர்வு. இடைக்கச்சை முன்பக்க முடிச்சுடன் காணப்படுகிறது. வயிற்றில் உதரபந்தம், யக்ஞோபவீதம் இடமார்பின் வழியே செல்கிறது. கைகளில் கங்கணம், தோள்வளை, கழுத்தில் அட்டிகை, கால்களில் சதங்கை முதலிய அணிகலன்கள் காட்டப்பட்டுள்ளன. கிரந்த எழுத்தில் 'புதஹா' (புதன்) என எழுதப்பட்டுள்ளது.

**செவ்வாய்**

பீடத்தின் மீது யோக அர்த்த பத்மாசனத்தில் அமர்வு. தலை உடைந்துள்ளது. வலதுகாலை மடித்து, வலது பாதம் மேல்நோக்கியவாறு யோக அமர்வாகவும், இடது காலை தொங்கவிட்டவாறும் செவ்வாய் அமர்ந்துள்ளார். தொங்கும் வலது காதில் குண்டலம் தெரிகிறது. கணுக்கால் வரை நீண்ட ஆடை முன்பக்கம் முடிச்சுடன் கூடிய இடைக்கட்டும் அணிந்தவாறும், தோள்வளை, கடகம், முன்வளை, கங்கணமும் கையணிகளாகவும், வயிற்றில் உதரபந்தம், மார்பின் குறுக்கே சன்னவீரம் (வீரச்சங்கிலி), கழுத்தில் அட்டிகை அணிந்துள்ளார். இச்சிலையில் கிரந்த எழுத்தில் 'குஜ' (செவ்வாய்) என்ற பெயர் காணப்படுகிறது.

**தேவி**

நான்கு கைகளுடன் பெண் சிற்பம் அமர்வு நிலை காட்டப்பட்டுள்ளது. புடைப்புச் சிற்பமாக உள்ளது. நெற்றிக்கண்ணியோடு கூடிய கிரீடமகுடம், நீள்காதுகளில் மகரகுண்டலங்கள், கழுத்தில் அட்டிகை, மார்பில் கச்சை, நான்கு கைகளில் பின்னிருகைகளில் இடதில் கெண்டியும், வலதில் மலரும் ஏந்தியவாறும், முன்கைகளில் இடது கை தொடைமேல் வைத்தும், வலதுகை மலர் ஏந்தியும் காட்டப்பட்டுள்ளார். இடைக்கட்டுடன் கூடிய ஆடை தெரிகிறது. கால்களும், பீடமும் உடைந்துள்ளது.

**யாளி**

யாளி சுதையால் ஆனது. நீண்ட உருளை வடிவ குவளை போன்ற உடலமைப்பையும், யாளி முகத்தையும் பெற்றுள்ளது. நெறித்த புருவமும், பெரிய முட்டைக் கண்களும், பெரிய, அகன்ற வாயும் கொண்ட யாளியின் முகம் சிதைந்துள்ளது.

அமர்ந்துள்ளாள். கழுத்தில் சரப்பளியும், முத்துமாலையும் தெரிகின்றன. கைகளில், தோள்வளை, கடகம், முன்வளைகள் காட்டப்பட்டுள்ளன. கால்களில் சதங்கை உள்ளன. கணுக்கால் வரை நீண்ட பட்டாடையின் முடிச்சு பின்புறம் படர்ந்துள்ளது. மார்பில் கச்சை இல்லை. பூரிம மகுடமாய் இருக்கலாம்.

**தேவி**

வயிறுவரை மட்டுமே உள்ள இத்தேவியின் சிற்பம் இருகைகளுடன் காட்டப்பட்டுள்ளது. பூரிமத்துடன் கூடிய கரண்ட மகுடம், காதுகளில் குண்டலங்கள், கைகளில் கடகம், முன்வளைகள் ஆகியன தெரிகின்றன. இருகைகளில் வலது கை கடிமுத்திரையும், இடது கை தொடையில் வைக்கப்பட்டிருப்பது போலவும் உள்ளன.

**பூதேவி**

நெற்றிக்கண்ணி மாலையோடு கூடிய கரண்டமகுடம் இருபுறமும் பூரிமத்துடன் விளங்க, நீள்காதுகளில் குண்டலங்கள் அணிந்து, பூதேவியானவள் பீடத்தின் மேல் வலது காலை மடித்து இடது காலை ஸ்வஸ்திகத்தில் வைத்து அமர்ந்துள்ளார். இருகைகளில் இடது கை இடது தொடைமீதும், வலது கை கடிமுத்திரையும் காட்டி, கணுக்கால் வரை நீண்ட ஆடையும், கால்களில் சதங்கையும், கைகளில் தோள்வளை, கடகவளை, முன்வளைகளும், கழுத்தில் சரப்பளியும் அணிந்துள்ளார். இடது மார்பின் வழியே யக்ஞோபவீதம் செல்கிறது. மார்பில் கச்சை காட்டப்படவில்லை.

**தேவி**

நெற்றிப்பட்டைத் துலங்கும், பூரிம மகுடம் அணிந்த இத்தேவி காதுகளில் பெரிய வளையங்களையும், கழுத்தில் சரப்பளி, ஆரம் ஆகியன அணிந்தும் உள்ளார். பீடத்தின் மீது வலது காலை மடக்கி, இடது காலை குத்துக்காலிட்டுள்ள இத்தேவி இருகைகளில், வலது கையை வலது தொடையின் மீதும், இடது கையை கடி முத்திரையிலும் வைத்துள்ளார். மார்பின் வழியே முப்புரிநூல் செல்கிறது. கணுக்கால் வரை நீண்ட ஆடை மடிப்புகளுடன் உள்ளது. கால்களில் சதங்கை காட்டப்பட்டுள்ளது. கைகளில் கற்கடகம், முன்வளைகள் உள்ளன. மார்பில் கச்சை இல்லை.

**முருகன்**

பீடத்தின் மேல் வலது காலை மடித்து, இடது காலை ஸ்வஸ்திகத்தில் வைத்து, நான்கு கைகளுடன் அமர்வு நிலை. தலை முழுவதும் உடைந்துள்ளது. மேற்கைகளில் உள்ள கருவிகள் தெரியவில்லை. கீழ் இடது கை தொடைமீதும், வலது கை கடி முத்திரையிலும் அமைந்துள்ளது. இடையாடை தெரிகிறது. கைகளில் கற்கடகம், முன்வளைகள் உள்ளன.

## பராந்தக பாண்டியன் (கி.பி.880-900)

சீமாறன் சீவல்லபன் இரண்டாம் மகனாகிய பராந்தகப் பாண்டியன் சடையவர்மன் என்னும் பட்டம் புனைந்து அரசாண்டவன். இம்மன்னன் கரகிரியில் உக்கிரனையும், கங்கர்களையும் போரில் வென்று பல தேவதானங்களும், பிரமதேயங்களும், பள்ளிச் சந்தங்களும் அளித்தான் என்று சின்னமனூர்ச் செப்பேடுகள் கூறுகின்றன. பராந்தகப் பாண்டியனுக்கு வீரநாராயணன் என்ற சிறப்புப் பெயர் வழங்கப் பெற்றது. இவனுடைய பட்டத்தரசி சேரமன்னனின் மகளாகிய வானவன்மாதேவி என்பவரது பெயரால் திருநெல்வேலியில் சேரமாதேவி என்னும் நகரம் அமைக்கப் பெற்றது. இவர்களது புதல்வனே மூன்றாம் இராசசிம்ம பாண்டியன் ஆவான்.

நீள் காதுகளில் குண்டலங்கள் துலங்குகின்றன. யக்ஞோபவீதம் இடமார்பின் வழி செல்கிறது. உத்தரீயத்தின் முடிச்சுப்பகுதி இடது தோளின் மேற்புறம் காட்டப்பட்டுள்ளது. வயிற்றில் உதரபந்தம், கழுத்தில் சவடி, கைகளில் கடகம், தோள்வளை, முன்வளைகள் தெரிகின்றன. ஆடை இடைக்கட்டின் முடிச்சு முன்புறம் காட்டப்பட்டுள்ளது. முழு ஆடையாய் இருக்கலாம்.

**வராகி**

பீடத்தில் அமர்வு நிலை. வலதுகாலை மடித்து, இடதுகாலை தொங்கவிட்டு, நான்கு கைகளுடன் காட்சியளிக்கும் வராகியின் முகமும், தலையணியும் சிதைந்துள்ளது. மேற்கைகளில் சங்கும், பிரயோகச்சக்கரமும், கீழ் இடது கை தொடையில் வைத்தபடியும், வலது கை கடிமுத்திரையும் காட்டி நிற்கிறது. மார்பில் யக்ஞோபவீதம் செல்கிறது. கழுத்தில் பட்டையான அணிகள் அழகு செய்கின்றன. இடையில் இடைக்கட்டும், உடைத்தாரமும் உள்ளன.

**தேவி**

தேவி அமர்ந்துள்ள பீடம் சிதைந்துள்ளது. பீடத்தின் மேல் இடது காலை குத்துக்காலிட்டு, வலது காலை மடக்கி, இடது கையை கடிமுத்திரையிலும், வலதுகையை தொடைமீது வைத்தும் கரண்டமகுடராய் தேவி விளங்குகிறாள். கரண்ட மகுடம் முன்பக்கம் பூரிமத்தைக் கொண்டுள்ளது. நெற்றியில் உருண்ட பட்டம் செல்கிறது. காதுகளில் பத்ரகுண்டலங்கள் அணி செய்கின்றன. கழுத்தில் சரப்பளி, கைகளில் தோள்வளை, கடகம், முன்வளைகள் அழகு செய்கின்றன. இடமார்பின் வழியே முப்புரிநூல் செல்கிறது. இடப்பக்கம் தலையைச் சற்று சாய்த்துள்ள இத்தேவியின் சிற்பம் இறைவருக்கு வலப்பக்கத்தில் அமைந்ததாய் இருக்கலாம். மார்பில் கச்சை இல்லை. பூதேவி சிற்பமாய் இருக்கலாம்.

**தேவி**

பீடத்தின் மேல் வலது காலை மடித்து, இடதுகாலை ஸ்வஸ்திகத்தில் வைத்து, கரண்டமகுடம் தரித்து, நெற்றியில் முகப்பும், பட்டமும் துலங்க, நீள்காதுகளில் மகரகுண்டலங்கள் விளங்குகின்றன. கழுத்தில் சரப்பளி, அட்டிகை காணப்படுகின்றன. கைகளில் கடகமும், முன்வளைகளும், வயிற்றில் உதரபந்தம் ஆகியன உள்ளன. இருகைகளில் இடது கையை தொடை மீது வைத்தும், வலது கை கடி முத்திரையிலும் உள்ளன.

## தேவி

இச்சிற்பத்தின் தலையும், முகமும் உடைந்துள்ளன. பீடத்தின் மேல் வலதுகாலை மடக்கி, இடதுகாலை தொங்கவிட்டு அமர்வு நிலை. காதுகளில் மகர குண்டலங்கள், கழுத்தில் சரப்பளி, சவடியும், இருகைகளில் வலது கை கடிமுத்திரையும், இடது கை தொடைமீதும், கைகளில் தோள்வளைகள், கற்கடகம், முன்வளைகள் முதலியன அணிந்தும் தேவியின் சிற்பம் அமைந்துள்ளது.

## இந்திரன்

இருகைகளுடன் இந்திரன் பீடத்தின் அமர்ந்துள்ளான். வலதுகாலை மடக்கி, இடதுகாலை தொங்கவிட்டு சிறுதாங்கிக்கல்லில் வைத்தும் நேரான அமர்வு நிலை. மகுடமும் முகமும் உடைந்துள்ளது. நீள் காதுகளில் மகரகுண்டலங்கள், கழுத்தில் பட்டையான தொங்கல்களுடன் கூடிய முத்தாரம், கைகளில் கற்கடகம், முன்வளைகள் அணிந்துள்ளான். இடமார்பின் வழியே யக்ஞோபவீதம் செல்கிறது. வயிற்றில் உதரபந்தம் காட்டப்பட்டுள்ளது. கணுக்கால் வரை நீண்ட பட்டாடை அணிந்துள்ளான். இடைக்கட்டின் முடிச்சு முன்புறம் காட்டப்பட்டுள்ளது. முகமும், தலையும் சிதைந்துள்ளன. 'சதக்ரது' (இந்திரன்) எனக் கிரந்த எழுத்தில் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

## வைஷ்ணவி

பீடத்தின் மீது வலதுகாலை யோக நிலையில் மடக்கி, இடதுகாலை ஸ்வஸ்திக நிலையில் ஊன்றியும் அமர்ந்துள்ள இத்தேவியின் சிற்பம், நீண்ட பூரிமத்துடன் கூடிய கரண்டமகுடம் தரித்து, நீள்காதுகளில் குண்டலங்கள் விளங்க, மார்பில் யக்ஞோபவீதம் துலங்க, கழுத்தில் அட்டிகை அணிந்து, நான்கு கைகளில் மேற்கைகள் சங்கு, சக்கரம் தாங்கியும், கீழ்கைகளில் இடது கை தொடைமீதும், வலது கை உடைந்தும் காட்டப்பட்டுள்ளது.

## தேவி

பீடத்தின் மேல் அமர்வு. வலதுகாலை யோக நிலையில் மடக்கி, இடதுகாலை ஸ்வஸ்திக நிலையில் ஊன்றியும் அமர்ந்துள்ள இத்தேவியின் சிற்பம், கரண்டமகுடம் தரித்து, நீள்காதுகளில் குண்டலங்கள் விளங்க, இடது கை தொடைமீதும், வலது கை கடி முத்திரை காட்டியும் காட்டப்பட்டுள்ளது.

## தேவி

பீடத்தின் மீது வலது காலை மடித்து, இடது காலை குத்துக்காலிட்டு அமர்வு நிலையிலுள்ள இத்தேவி இருகைகளில் வலது கையை வலத்தொடையின் மீது வைத்தும், இடது கையில் மலரைப் பிடித்தபடியும் தலையை இடப்பக்கமாக சற்று சாய்த்து

## கௌமாரி

கௌமாரி சப்த மாதருள் ஒருவராவார். அமர்வு நிலையிலுள்ள இச்சிற்பத்திற்கு கால்கள் உடைந்துள்ளன. பீடமும் காணப்படவில்லை. புடைப்புச் சிற்பமாக காட்டப்பட்டுள்ளது. நீள்காதுகளில் பத்ர குண்டலங்கள் அணிந்துள்ளாள். கழுத்தில் கண்டி, சவடி, சரப்பளி ஆகிய அணிகலன்கள் அழகு செய்கின்றன. மார்பின் மையத்தின் வழியே சன்னவீரம் காட்டப்பட்டுள்ளது. இருகைகளில் வலது கை கடி முத்திரையும், இடது கை இடது தொடை மேல் வைத்தபடியும் உள்ளது.தோள்களின் வழியே வகுளமாலை செல்கிறது.

## திருமால்

நான்கு திருக்கைகளுடன் அமர்வு நிலையில் விஷ்ணு சிற்பம் உள்ளது. பீடம் மற்றும் தொங்கவிடப்பட்ட இடது கால் உடைந்துள்ளது. வலது கால் மடக்கி பாதம் மேல் நோக்கிக் காட்டப்பட்டுள்ளது. கணுக்கால் வரை நீண்ட இடைக்கட்டும், உடைத்தாரமும் முடிச்சுகளுடன் உள்ளது. வயிற்றில் உதரபந்தம், இடமார்பின் வழியே செல்லும் யக்ஞோபவீதத்தின் முடிச்சு மார்பின் மையத்தில் காட்டப்பட்டுள்ளது. கழுத்தில் சவடியும், அட்டிகையும் அழகுசெய்கின்றன. காதுகளில் மகரகுண்டலங்கள் விளங்க, அணிகள் துலங்கும் நான்கு கைகளில் மேற்கைகளில் சங்கு, சக்கரம் ஏந்தி, கீழிருகைகளில் இடது கை தொடை மேல் வைத்தும், வலது கை உடைந்துள்ளது. கிரீடத்திலிருந்து முகம் முழுவதும் உடைந்துள்ளது.

## திசைக்காவலர்

வலதுகால் மடக்கி, இடதுகாலை தொங்கவிட்டு அமர்ந்த நிலையிலுள்ள திக்பாலர் சிற்பம் இரண்டு கைகளுடன் காட்டப்பட்டுள்ளது. இடது கை இடது தொடை மீது வைத்திருக்க, வலது கை முத்திரை உடைந்துள்ளது. மார்பில் யக்ஞோபவீதம் துலங்க, நீள்காதுகளில் குண்டலங்கள் விளங்க, கழுத்தில் அட்டிகையும், கைகளில் கடகம், முன்வளைகள் அணிந்து, நெற்றிப்பட்டையுடன் கூடிய கிரீடமகுடத்துடன் திசைக்காவலர் சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது.

## வைஷ்ணவி

புடைப்புச் சிற்பமாய் பீடத்தின் மேல் அமர்வு நிலை. இடது காலை மடக்கி, வலதுகாலை தொங்கவிட்டுள்ளார். நான்கு திருக்கைகளில் மேற்கைகள் சங்கு, சக்கரத்தைத் தாங்கியும், கீழ்க்கைகளில் இடது கை தொடை மீதும், வலது கையில் மலரைப் பிடித்தும் உள்ளார். சக்கரம் பிரயோக நிலையில் காட்டப்பட்டுள்ளது. முகம் சிதைந்துள்ளது. கரண்டமகுடராய், காதுகளில் நீண்ட குண்டலங்கள் அழகுசெய்ய,

# 6. அகழாய்வுக் குழிகள்

அகழாய்வுக்குழிகள் EKP என்றும் குறிக்கப்படுகின்றன. முதல் குழி சாலையிலிருந்து 15 மீ தூரத்தில் வடக்கு தெற்காக 5 X 4 மீட்டர் இடைவெளியில் 4 X 4 மீட்டர் அளவில், அகழ்வுப்பணி மேற்கொள்ளப்பட்டது. மேல் பகுதி மண் அகற்றப்பட்வுடன் 50 செ.மீ. ஆழத்தில் சிவப்பு மண், செங்கல் துண்டுகள் வெளிப்படுத்தப்பட்டன. இவை கட்டட இடிபாடுகளின் குவியலாக இருக்கக்கூடும்.

உருண்டை, நீண்ட உருண்டை வடிவக்கற்கள் பெரிய அளவில் பரப்பப்பட்டுள்ளன. பாவபப்பட்ட அடித்தளம் காணப்படுகிறது. பெரும்பாலான வரலாற்றுக் காலகட்டங்களின் அடித்தளம் மணல் (ம) கல் உருண்டைகள் அல்லது செம்பராங்கற்களைக் கொண்டு அமைப்பது வழக்கம் இதைப்போன்றே இங்கும் அடித்தளப்பகுதி அமைந்துள்ளது.

கட்டடப்பகுதி மண்கலந்த கருங்கற்கள் அடித்தளத்தின் மேல் கட்டப்பட்டுள்ளன. முதலில் செங்கல் கட்டடப்பகுதி, அதன்கீழ் ஆற்று மணல், அதன் கீழ் உருண்டைய கருங்கற்கள் (Stone boulders) என்ற அமைப்பில் உள்ளன.

கருங்கல் பலகை பகுதி 23 செ.மீ. ஆழத்தில் காணப்படுகிறது. இக்கல்லைத் தொடர்ந்து கருங்கல் உருண்டைகளும் மணலும் கலந்து அடித்தளமாகக் காணப்படுகின்றன. இக்கருங்கல்லின் மேல் பகுதியில் ┼ போன்ற குறியீடுகள் காணப்படுகின்றன. மூன்று குறியீடுகள் ஒன்றையடுத்து ஒன்றுள்ளன, இது ஒரு அளவுகோலினைக் குறிக்கலாம்.

சுதையால் ஆன தாமரை மலரின் மொட்டு ஒன்றும், யாளியின் முகப்பகுதி ஒன்றும் உடைந்த நிலையில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. சுதையால் ஆன உருவங்களின் துண்டுகள் கிடைக்கின்றன.

இவ்வகழாய்வில் கிடைத்த முழுமையான செங்கற்களின் அளவுகள்;

முதல் வகை 40 x 20 x 10 செ.மீ.

இரண்டாம் வகை 30 x 15 x 8 செ.மீ.

கருங்கல் அதிட்டானம் மேற்கிலிருந்து வடக்கு திசையில் செவ்வகமான அமைப்புடன் காணப்படுகிறது. ஆனால் கிழக்குப் பகுதியில் அதன் தொடர்ச்சி

### 3.அமர்ந்த நிலையிலுள்ள அம்மன்

அமர்ந்த நிலையிலுள்ள அம்மனின் தலையில் கிரீட மகுடம் காட்டப்பட்டுள்ளது. இரண்டு கால்களில் ஒன்று உடைத்துள்ளது. தொடை மேல் ஒரு கை வைத்த நிலையிலும், மார்புக்கச்சை இன்றியும் காணப்படுகின்றது. முற்காலப் பாண்டியர்களின் கலையில் உருவானது. நீளம் 1 மீ. அகலம் 64 செ.மீ.

### 4.அமர்ந்த நிலையிலுள்ள சிற்பம்

அமர்ந்த நிலையிலுள்ள ஆண் சிற்பத்தின் தலை உடைந்துள்ளது. இரண்டு கரங்கள், ஒன்று அபயம் போன்ற அமைப்பிலும், மற்றொன்று தொடை மேல் வைத்த நிலையிலும் காணப்படுகின்றன. உடைந்த நிலையில் உள்ளது. நீளம் 70 செ.மீ. அகலம் 56 செ.மீ.

### 5.அம்மன்

தலை இல்லை, அமர்ந்த நிலையிலுள்ள அம்மன். இரண்டு கரங்களில் ஒன்றில் மலர் ஏந்திய நிலை, மற்றொன்று தொடை மேல் வைத்த நிலை. ஒரு காலை மடக்கியும், ஒரு காலை தொங்கவிட்ட நிலையிலும் காணப்படுகின்றது. இதில் சுண்ணாம்பு, செங்கல் துண்டுகள் காணப்படுகின்றன. மார்புக்கச்சை இல்லை. நீளம் 65 செ.மீ. அகலம் 44 செ.மீ.

### 6.பீடம் மட்டும்

பீடமும் அதன் மேல் கால்கள் மட்டும் காணப்படுகின்றன. அமர்ந்த நிலை. நீளம் 45 செ.மீ. அகலம் 50 செ.மீ.

### 7.உருவமற்ற கல்

முற்றுப்பெறாத உருவம்.

### 8.ஆண் உருவம்

தலை இல்லை. ஒரு பக்கம் கையும், மற்றப்பகுதிகளும் உடைந்துள்ளன. ஒரு கால் மடித்த நிலை, மற்றொன்று தொங்கவிட்ட நிலை. பீடமும் உடைந்துள்ளது. நீளம் 80 செ.மீ. அகலம் 50 செ.மீ.

### 9.ஆண் உருவம்

அமர்ந்த நிலை. தலை இல்லை. இரண்டு கரங்கள். ஒரு கை அபயம், மற்றொன்று தொடை மேல் வைத்த நிலையைப் போன்றுள்ளன. நீளம் 75 செ.மீ. அகலம் 58 செ.மீ.

### 10.முற்றுப்பெறாத நிலை

தலை உடைந்துள்ளது. முற்றுப் பெறாத நிலை. கரடுமுரடாக காணப்படுகின்றது. நீளம் 70 செ.மீ. அகலம் 45 செ.மீ.

### 11.அம்மன்

அமர்ந்த நிலை. தலை இல்லை. இரண்டு கரங்கள். கால்களில் ஒன்று மடக்கிய நிலை, மற்றொன்று குத்திட்ட நிலையில் உள்ளன.

### 12.அம்மன்

அமர்ந்த நிலையிலுள்ள அம்மன். தலை இல்லை. பீடம் பெரியது. ஒரு கால் குத்திட்ட நிலையிலும், மற்றொன்று மடக்கிய நிலையிலும் உள்ளன. முப்புரிநூல் காணப்படுகின்றது. நீளம் 75 செ.மீ. அகலம் 50 செ.மீ.

### 13.அம்மன்

தலையின்றி அமர்ந்த நிலையிலுள்ள அம்மன். இரண்டு கால்களில் ஒன்று குத்திட்ட நிலையிலும், மற்றொன்று மடக்கிய நிலையிலும் உள்ளன. நீளம் 70 செ.மீ. அகலம் 50 செ.மீ.

### 14.ஆண் உருவம்

அமர்ந்த நிலையிலுள்ள ஆண் உருவம். தலை இல்லை. இரண்டு கரங்கள். கால்கள் மடக்கிய நிலை மற்றும் தொங்கவிட்ட நிலை. நீளம் 73 செ.மீ. அகலம் 50 செ.மீ.

### 15.அமர்ந்த உருவம்

தலை இன்றி உள்ள உருவத்தில் இரண்டு கரங்கள் உள்ளன. வலது கையில் சின்முத்திரையைப் போன்ற அமைப்பும், இடது கை தொடை மேல் வைத்த நிலையும் காணப்படுகின்றன. நீளம் 70 செ.மீ. அகலம் 50 செ.மீ. செ.மீ.

### 16.அமர்ந்த உருவம்

தலை இன்றி உள்ள உருவத்தில் இரண்டு கரங்கள் உள்ளன. வலது கையில் சின்முத்திரையைப் போன்ற அமைப்பும், இடது கை தொடை மேல் வைத்த நிலையும் காணப்படுகின்றன. நீளம் 70 செ.மீ. அகலம் 50 செ.மீ.

### 17.ஆண் உருவம்

தலை இல்லா ஆண் உருவம். இரண்டு கரங்கள். பீடத்துடன் நீளம் 87 செ.மீ. அகலம் 57 செ.மீ.

# துணைநின்ற நூல்கள்

1. சங்க இலக்கியங்கள்

2. வரதராசனார், மு. தமிழ் இலக்கிய வரலாறு

3. Sastri, A History of South India from Pre-historic Times to the Fall of Vijayanagara

4. Sastri, The Pandya Kingdom from the Earliest Times to the 16th Century, Swathi Publications, Madras

5. Krishnamoorthy, R. Sangam Age Tamil Coins, Gornet Publications, Madras, 1997

6. கிருஷ்ணமூர்த்தி, இரா. பாண்டியர் பெருவழுதி காசு, சென்னை–2, 1987

7. கோபாலன், தே. நெல்லை மாவட்டத் தொல்லியல் கையேடு, தொல்லியல் துறை, சென்னை–1993

●●●

### தேவி

கரண்டமகுடராய் காட்சிதரும் இச்சிற்பம் பீடத்தின் மேல் அமர்ந்துள்ளது. இரண்டு கைகளில் இடது கை தொடை மீதும், வலது கை கடி முத்திரையாய் இருக்கலாம். காதுகளில் பெரிய வளையங்கள் தெரிகின்றன. மற்றஅணிகள் ஏதும் தெரியவில்லை.

### திசைக்காவலர்

பீடத்தின் மீது வலது கால் மடக்கி, இடது காலை தொங்கவிட்டு அமர்ந்த நிலையிலுள்ள திக்பாலர் சிற்பம் இரண்டு கைகளுடன் காட்டப்பட்டுள்ளது. இடது கை இடது தொடை மீது வைத்திருக்க, வலது கை முத்திரை சிதைந்துள்ளது. வயிற்றில் உதரபந்தம், மார்பில் யக்ஞோபவீதம் துலங்க, நீள்காதுகளில் மகரகுண்டலங்கள் விளங்க, கழுத்தில் அட்டிகையும், கைகளில் கற்கடகம், முன்வளைகள் அணிந்து, நெற்றிப்பட்டையுடன் கூடிய கரண்டமகுடத்துடன் திசைக்காவலர் சிற்பம் அமைக்கப் பட்டுள்ளது.

## இராஜாக்கள்மங்கலம் அகழாய்வு செய்யும் இடத்தில் அகழாய்வுக்கு முன்னர் சேகரிக்கப்பட்ட உதிரிச் சிற்பங்கள்

இராஜாக்கள்மங்கலம் அகழாய்வு செய்யும் இடத்திலுள்ள முட்புதரைச் சுத்தம் செய்தபோது அங்கு உதிரிச் சிற்பங்கள் இருப்பது தெரியவந்தன. இச்சிற்பங்கள் சுத்தம் செய்யப்பட்டு எண்ணிடப்பட்டன. இங்குள்ள சிற்பங்களில் உடைந்த நிலையிலுள்ளவை, முற்றுப்பெறாதவை என்று பலவகைப்பட்டன காணப்படுகின்றன. அகழாய்வு செய்யும் இடத்தில் மொத்தம் 23 சிற்பங்களும், ஆற்றில் 2 சிற்பங்களும் ஆக மொத்தம் 25 சிற்பங்கள் இங்குள்ளன. இதன் விவரங்கள் பின்வருமாறு.

### 1.பீடம்

உடைந்த நிலையிலுள்ள பீடம். பீடத்தின் மேல் அமர்ந்த நிலையிலுள்ள உருவத்தின் கால்களில் ஒன்று தொங்கவிட்ட நிலையில் காணப்படுகின்றது. அதன் நீளம் 50 செ.மீ. அகலம் 50 செ.மீ.

### 2.பலகைக்கல்

செவ்வக வடிவத்திலுள்ள பலகைக்கல். கோயிலில் பயன்படுத்தப்பட்டதாக இருக்கலாம். கல்லின் ஒரு பக்கத்தில் சுண்ணாம்புக் கலவைக் காணப்படுகின்றது. உருவம் இல்லை. நீளம் 1 மீ. அகலம் 60 செ.மீ.

கிடைக்கவில்லை. அத்தளத்தின் அருகில் செங்கல் பாவப்பட்டுள்ளது. இது அடித்தள அமைப்பிற்கு உதவியாக அமைந்துள்ளது. இச்செங்கல் வரிசை 40 செ.மீ. ஆழத்திற்கு தொடர்ந்து காணப்படுகிறது.

அடித்தளம் எல் '└─' வடிவில் உள்ளது. இது கோயிலின் அடித்தளத்தில் காணப்படும் பட்டியைப் போன்று தொடர்ந்து காணப்படுகிறது.

இவ்வடித்தளத்தின் கீழ்ப்பகுதியில் 20 செ.மீ. ஆழத்தில் செங்கல் வரிகள் இரண்டு பாவப்பட்டுள்ளன. இது கருங்கல்லில் இருந்தபோது அதற்குத் துணையாக அல்லது தாங்கு சுவரைப் போன்று செங்கற்கள் பாவப்பட்ட தளம் ஒன்று கருங்கல் அடித்தளத்தின் அருகில் காணப்படுகிறது. இது சதுரம் (ம) செவ்வக செங்கற்களைக் கொண்டு பாவப்பட்டுள்ளது, இப்பகுதி அடித்தளத்தைத் தொடர்ந்து செல்கின்றது.

அடித்தளத்தின் மேல் பகுதியில் செங்கல் கட்டடத்தின் அமைப்பு இருந்ததற்கான சுண்ணாம்புப் படிவம் காணப்படுகிறது. பொதுவாக கோயில் கட்டுமானத்தில் கருவறையைத் தொடர்ந்து கட்டத்தில் பிதுக்கமும் (Projection) அதனைத் தொடர்ந்து உட்புறம் எடுத்துக்கட்டுதல் போன்ற அமைப்புடன் கட்டப்படுவது போன்று இங்கும் காணப்படுகிறது. சுண்ணாம்புச் சாந்து கல்லின் மேல் பகுதியில் பாவப்பட்டுள்ளது.

கருங்கல்லால் ஆன சுவர் 60 செ.மீ. ஆழத்தில் கிடைத்துள்ளது. அடித்தளம் தொடர்ந்து தெற்குப்பகுதியிலிருந்து வடக்குப்பகுதி நோக்கிச் சென்று பின்னர் 1.48 மீட்டர் நீளத்தில் மீண்டும் கிழக்கில் திரும்பிச் செல்கிறது. இது கட்டடத்தின் நுழைவு வாயில் போன்ற அமைப்பாக இருத்தல் கூடும்.

கல் பிரபை ஒன்று கிடைத்துள்ளது. இதில் நெருப்பு ஜுவாலைகள் காட்டப்பட்டுள்ளன. தலைப்பகுதி மட்டும் உள்ளது. ஆனால் உருவம் சரியாகத் தெரியவில்லை.

வடக்குப்பகுதியில் உள்ள அடித்தளம் தெற்கு நோக்கிச் செல்கிறது. இது கல்பீடத்தின் உட்பகுதியில் மணல் மற்றும் கரடுமுரடான கருங்கற்களைக் கொண்டு அமைக்கப்பட்ட அடித்தளமாகும். இங்கு கிடைத்துள்ள 6 அடி உயரமுடைய அம்மன் சிலை ஸ்ரீதேவியாக இருக்கக்கூடும்.

சதுர அமைப்புடைய கருங்கல் அடித்தளம் கிழக்குப்பகுதியில் இரண்டு பகுதிகளிலும் வாயில் போன்ற அமைப்புடன் காணப்படுகிறது. இருபுறமும் 12.64 மீட்டர் நீளத்தில் வளைந்து பின்னர் கிழக்கு நோக்கிச் செல்கின்றன. அடித்தளப்பகுதி கிழக்கில் 10 மீ. நீளம், வடக்கில் 6 மீ. நீளமும் காணப்படுகிறது. இவ்வடித்தளக்கற்கள் நீண்டு அகலமாக உள்ளன.

கிழக்கு நோக்கிச் செல்கின்ற அடித்தளத்தில் வெளிப்புறம்  போன்ற குறியீடுகள் காணப்படுகின்றன. மொத்தம் மூன்று இடங்களில் இக்குறியீடுகள் உள்ளன. அவைகளுக்கிடையில் உள்ள அளவுகள் கீழ்க்கண்டவாறு காணப்படுகின்றன.

1. முதல் இரண்டு இடங்களுக்குக்கிடையில் உள்ளஅளவு 31 செ.மீ.
2. இரண்டாவதற்கும் மூன்றுக்கும் உள்ள அளவு 1.48 மீட்டர்
3. முதலாவதற்கும் இறுதிக்கும் உள்ள அளவு 2.96 மீட்டர்

கருங்கல் அடித்தளம் 12.64 மீ. நீளத்தில் வடக்குப் பகுதியில் திரும்பி செல்கின்றது. இந்த அமைப்பு நுழைவாயிலைப் போன்று காணப்படுகிறது. மண் சிவப்பு நிறத்துடன் சுண்ணாம்பு கலவைக் கலந்து காணப்படுகின்றது.

EKP, EKP-1, 2, மற்றும் EKP - 3 ஆகியவற்றினை விரிவுபடுத்தியபோது அடித்தளம் சராசரியாக 65 செ.மீ. ஆழத்தில் காணப்பட்டது. கருங்கல்லின் மேல் பகுதியில் சுண்ணாம்பு கரையின் எஞ்சியப் பகுதிகள் காணப்படுகின்றன. இது செங்கல் கட்டடப்பகுதியின் எச்சங்களாகத் தெரிகிறது. ஆனால் முழுமையான செங்கல் ஒன்று கூட கிடைக்கவில்லை. வடக்குப் பகுதியின் அடித்தளம் 12.64 மீட்டர் நீளம் வரை செல்கிறது. பின்னர் தெற்கில் திரும்புகிறது. இதன் அமைப்பினை நோக்கும்போது இது கிழக்கு நோக்கியும், பின்னர் வடக்கு நோக்கியும் சென்று பின்னர் திரும்பவும் கிழக்கு நோக்கி செல்வதால் இது வாயில் பகுதியாக இருக்கலாம் எனத் தெரிகின்றது.

அடித்தளத்தினை அடுத்துள்ள எல்லா பகுதிகளிலும் மணல் கலந்த கருங்கற்கள் பாவப்பட்டுள்ளன. அடித்தளப்பகுதியாகவே உள்ளது. இதனை நோக்கும்போது இது சதுர அமைப்புடைய கோயிலையும் அதன் நுழைவு வாயிலையும் கொண்ட அமைப்பாக இருத்தல்கூடும் எனத் தெரிகின்றது.

## முடிவுரை

இராஜாக்கள்மங்கலம் (இரணியன் குடியிருப்பு) நடத்தப்பட்ட அகழாய்வில் கோயில் ஒன்றின் அடித்தளப்பகுதி கிடைத்துள்ளது. ஆனால் இங்கு அதிக அளவில் முற்றுப்பெற்ற மற்றும் முற்றுப்பெறாத கற்சிற்பங்கள் கிடைத்துள்ளன. மேலும் சிலவற்றில் கிரந்த எழுத்துக்களும் காணப்படுகின்றன. இவற்றை நோக்கும்போது இங்கு முற்காலப் பாண்டியர் காலத்தில் (கி. பி. 8–ஆம் நூற்றாண்டில்) மிகப்பெரிய அளவிலான கோயிலோ அல்லது கோயிலில் வழிபாட்டிற்கான சிற்பக் கூடமோ இருந்திருக்கக்கூடும் என எண்ணத் தோன்றுகிறது. கழுகுமலை வெட்டுவான் கோயிலும் இதே காலக்கட்டத்தைச் சார்ந்ததாகும். முற்காலப் பாண்டியர் சிற்பக்கலைக்கு மிகச்சிறந்த எடுத்துக்காட்டாக இவை உள்ளன.

### 18. அம்மன்

அமர்ந்த நிலையிலுள்ள அம்மன். தலையில்லை. மார்பகம் உடைந்துள்ளன. ஒரு காலை மடக்கிய நிலையிலும், ஒரு காலைத் தொங்கவிட்ட நிலையிலும் உள்ளது. நீளம் 74 செ.மீ. அகலம் 50 செ.மீ.

### 19. அம்மன்

தலை இல்லை. மார்பகங்கள் உடைந்துள்ளன. கைகள் மற்றும் இரண்டு கால்கள் உடைந்துள்ளன. நீளம் 72 செ.மீ. அகலம் 45 செ.மீ.

### 20. ஆண் உருவம்

தலை இல்லை. இரண்டு கைகள், கால்கள் உடைந்துள்ளன. பீடத்துடன் நீளம் 85 செ.மீ. அகலம் 60 செ.மீ.

### 21. பீடம்

உடைந்த பீடத்தின் கீழ்ப்பகுதி நீளம் 60 செ.மீ. அகலம் 47 செ.மீ.

### 22. அம்மன்

இங்குள்ள சிற்பங்களில் பெரியது. பீடத்துடன் கூடிய அம்மன் உருவம் இடது கால் மடக்கிய நிலையிலும் உள்ளது. சன்னவீரம் காட்டப்பட்டுள்ளது. மார்பு உடைந்துள்ளது. இடைக்கச்சு காட்டப்பட்டுள்ளது. கையில் அணிகலன்கள் உள்ளன. முற்காலப்பாண்டியர் கலை வடிவம். நீளம் 1.10 மீ. அகலம் 1 மீ.

### 23. முற்றுப்பெறா உருவம்

முற்றுப்பெறா உருவம். நீளம் 75 செ.மீ. அகலம் 46 செ.மீ.

### 24,25. ஆற்றுச் சிற்பங்கள்

ஆற்றில் இரண்டு சிற்பங்கள் உள்ளன. அவை மண்ணில் புதைந்துள்ளன.

திருமலை நாயக்கர் அரண்மனையில் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ள சிற்பங்கள்



திசைக்காவலர்



தேவி



வைஷ்ணவி



முருகன்



சிற்பக்கூடம்

திருமலை நாயக்கர் அரண்மனையில் பார்வைக்கு
வைக்கப்பட்டுள்ள சிற்பங்கள்



வராகி



அக்னி



இந்திரன்



வைஷ்ணவி



திசைக்காவலர்



திசைக்காவலர்

## திருநெல்வேலி அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ள சிற்பங்கள்



திசைக்காவலர்



சாமரப்பெண்



தேவி



தேவி



தேவி

## திருநெல்வேலி அருங்காட்சியகத்தில் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ள சிற்பங்கள்



திசைக்காவலர்



திசைக்காவலர்



திசைக்காவலர்



தேவி



திசைக்காவலர்

அகழாய்வுக் குழிகளின் பல்வேறு தோற்றங்கள்









அகழாய்வில் வெளிப்படுத்தப்பட்ட
யாளி முகம்




அகழாய்வில் வெளிப்படுத்தப்பட்ட மண்அடுக்கு




அதிட்டானத்தில் அளவுகோல்



அதிட்டானத்தில் அளவுகோல்

## திருமலை நாயக்கர் அரண்மனையில் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ள சிற்பங்கள்



புதன்



செவ்வாய்



தேவி



பூதேவி



பூதேவி

திருமலை நாயக்கர் அரண்மனையில் பார்வைக்கு
வைக்கப்பட்டுள்ள சிற்பங்கள்



தேவி



தேவி



தேவி



யாளி-சுதை



தேவி